அனைத்திந்திய நூல் வரிசை

# இதுதான் நம் வாழ்க்கை

(பஞ்சாபி நாவல்)

தலீப் கௌர் டிவாணு

தமிழாக்கம்
தி. சா. ராஜு



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ஊக்குவிப்பாளர் – விநியோகிப்பாளர்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிமிட்,
41–பி, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை – 600 098

---

முதற் பதிப்பு : 1992 (சக 1914)

ISBN 81-237-0041-5

**ரூ. 21.00**

*Original Title : Yeh Hamara Jeevana (Punjabi Novel)*
*Tamil Title : Idudan Nam Vazhkkai*

வெளியீடு : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
ஏ–5, கிரீன் பார்க், புது டில்லி 110 016.

---

# முன்னுரை

பஞ்சாபி இலக்கியத்தில் புதினம் வரைவது என்பது, 1898-ல் பாய்வீர்சிங்குடன் தொடங்கிற்று. அவருடைய முதல் நாவல் சுந்தரி. பஞ்சாபி மொழியில் இரண்டு லட்சம் பிரதிகள் விற்ற நூல் இது.

இதை வரைவதற்கு ஒரு நோக்கமிருந்தது. பாய்வீர்சிங் சீக்கிய சமயத்தினர். தம்முடைய குருமார்களிடமும், அவரது வீரச்செய்கைகளிடையேயும், தியாக உணர்விலும் அவருக்கு அளவில்லாத ஈடுபாடு இருந்தது. அவர்கள் வழிநிற்பவர்களே உதாரண புருஷர்கள், சமுதாயத்தின் மேம்பாட்டிற்காக எல்லாத் தியாகங்களையும் மேற்கொள்ள வல்லவர்கள் என்ற கருத்தை இந்த நூலின் மூலம் அவர் சொல்ல விழைந்தார். அதை ஆழமாக வலியுறுத்தும் பொருட்டு மற்ற சமயத்தினருக்கு அவர் குரூரமான வண்ணங்களையும் தீட்டினர். தற்கால சீக்கிய சமயத்தினருக்குத் தமது முன்னோர்களின் பெருமையை வலியுறுத்துவதற்காக எழுதப்பட்ட இந்த நவீனம், தனது முயற்சியில் வெற்றி பெற்றதென்றே சொல்லவேண்டும். பாயிமோகன் சிங் வைத் (VAID) எழுதிய நூலையும் இதே பிரிவில்தான் சேர்க்க வேண்டும்.

இந்த மொழி இலக்கிய வரலாற்றின் அடுத்த கட்டத்தில் வந்தவர், ஸேஹ்ரா நானக் சிங். சமூகப் பிரச்சினைகள் அனைத்திற்கும் இலக்கிய வடிவம் தருவதில் இவர் முனைந்து நின்றார். அந்தப் பிரச்னைகளுக்கு விடைகாணும் முயற்சியில் அவர் வெற்றி பெறவில்லை. அவற்றின் மூலத்தை ஆராய்ந்து விடை காணுவது தமது பணியும் இல்லை என்றே அவர் கருதினார். தற்காலிக சமாதானங்களைமட்டும் அவ்வப்போது அவர் வழங்கிக் கொண்டு போகிறார்.

தூய்மையான கொடுஞ்செயலோன் (பவித்ரபாபி) என்ற ஒரு புதினம் மட்டும் இவற்றிற்கு விதிவிலக்கு. நடப்பியல் நிகழ்ச்சிகளை

மட்டும் இதில் அவர் தருகிறார். பிரச்சினைகளின் காரணங்களையோ, சமாதானங்களையோ அவர் விவரிக்க முற்படவில்லை. ஆசிரியருடைய 'வெள்ளை உதிரம்' (சிட்டா லஹூரி) ருஷிய மொழியிலும் கூட மொழிபெயர்க்கப் பட்டுள்ளது.

நடைமுறை இயல்புகளைத் துகிலுரிந்து காட்டும் பணி, சுரீந்தர் சிங் நருலாவின் "தந்தை-மகன்" (பியூ-புத்ர) என்ற நவீனத்துடன் தொடங்கியது என்று கூறலாம். கண் முன்பு நேரில் காணும் காட்சிகளை ஆழமான வர்ணங்களில் தீட்டுவதுடன், அவருடைய பணி முடிந்து விடுகிறது. அவை உள்ளத்தில் ஏற்படுத்தும் சலனங்களையோ, பொங்குதலையோ படம்பிடித்துக் காட்டுவதில்லை. அது தம்முடைய வேலையும் இல்லை என்றே ஆசிரியர் சொல்ல விரும்புகிறார்.

இவர்களை அடுத்துப் பெரும்பாலான வாசகர்களின் கவனத்தை ஈர்த்தது, ஜஸ்வந்த் சிங் க(ன்)வல் அவர்களின் எழுத்துக்கள். கவிதை மொழி, கிராம மக்களின் காட்சிகளின் தத்ரூபமான ஓவியங்கள், இவற்றுடன் இலட்சியவாதிகளை அவர் படைத்துக் காட்டுகிறார். தமது செய்தியைக் கதை மாந்தர்களின் மூலமாக உபதேசிக்கிறார். பாய்வீர்சிங் எப்படி நம்மைப் பழங்காலத்து உயர் தன்மைகளுடன் இணைத்தாரோ அப்படி இவர் எதிர்காலத்தில் வாழவேண்டிய நெறியினைக் குறித்து கவிதைக் கவர்ச்சியுடன் பேசுகிறார். எதிர்காலக் குறிக்கோளகளில் இவருக்கு இருக்கும் ஈடுபாட்டின் காரணமாக, இன்றைய நடைமுறை வாழ்க்கையின் நல்லியல்புகள், கருணை ஆகியவைகளைப் படம்பிடித்துக் காட்டவில்லை. சில அனுபவங்களை மட்டும் விவரித்து, அதன் மூலம் வாசகர்களை மகிழ்விக்க முயல்கிறார். இவரது படைப்புக்கள் சமூக விஞ்ஞான முறையிலோ, உலக இயல்பு வழியிலோ, சில விபரீதமான விளைவுகளை உண்டாக்கக் கூடும் என்று சொல்லுவோரும் உண்டு. என்றாலும், இந்தக் கட்டுப்பாடுகளை எல்லாம் மீறி மக்களை சமதர்மப் பாதையில் வழிநடத்த இவரது எழுத்துக்கள் மிகவும் பயன்பட்டுள்ளன என்பதும் மறுக்க இயலாத உண்மை.

பஞ்சாபி நவீனங்களின் வரலாற்றில், கர்த்தார்சிங் துக்கல் அவர்களுக்குச் சிறப்பிடம் ஒன்றுண்டு. அவர் பழமையையோ, எதிர்காலத்தையோ வர்ணிக்கவில்லை. இன்றைய நடைமுறை வாழ்க்கையை ஓர் உளக்கூற்று ஆய்வாளன்போல் ஆராய்கிறார், வர்ணிக்கிறார். நடை கவித்துவப் போர்வை உடையது. அந்த நடையின் அழகில் அதற்குத் தனிப்பட்ட கிளுகிளுப்பூட்டும்

தன்மையும், கவர்ச்சியும் ஏற்பட்டுள்ளது. 'அம்ருதா ப்ரீதம்' என்ற பெண் எழுத்தாளரின் வெற்றிக்குக் காரணம், அவருக்கு இந்தக் கலையில் இருக்கும் கோமளமான பார்வை, அதை வெகு சரளமாகக் கையாளும் திறமை ஆகியவை. ஆசிரியர் நரீந்தரபால் சிங் ஒரு படைவீரர். அவருக்கு வரலாற்றில் நிறைய ஈடுபாடு. ஆகவே அந்தத் துறையில் அவர் சுடர்விட்டு ஒளிர்கிறார்.

மோஹன் காலோ(ன்) அவர்களின் பார்வை, மற்றவர்களிடமிருந்து மாறுபட்டதாகும். உடல் வேகம், சமுதாயத்தில் விளைவிக்கும் கோளாறுகளை அப்பட்டமாக விவரிப்பது இவருடைய நோக்கம். இது காரணமாகவே, இவருடைய பெயரை இங்கு சிறப்பாகக் குறிப்பிட வேண்டியிருக்கிறது. இவருடைய கதை மாந்தர்கள் உடல் கனத்தினால், கீழே இழுக்கப்பட்டவர்கள்; வாழ்க்கையில் சிறப்பான குறிக்கோள்கள் ஏதும் இவர்களுக்குக் கிடையா. சமுதாயத்தை முன்னேறச் செய்யவேண்டும் என்பதில் இவருக்கு ஆர்வம். ஆனால் சீர்திருத்த நோக்கம் இருப்பதாகச் சொல்ல முடியாது. சொல்ல விரும்பியதைச் சிறப்பான பூச்சு ஏதுமின்றி விவரித்துவிடுவது இவருடைய இயல்பு. என்றாலும் சமுதாயத்தில் நடத்தை பிசகியவர்களையும், நம்முடைய இரக்கத்திற்கு ஏற்றவர்களாகப் படைத்துவிடுவது இவருடைய இலக்கிய ரசவாதம். எல்லோராலும் இந்த உத்தியை இவ்வளவு சரளமாகக் கையாள இயலாது. "ஒரே ஆற்றின் மீன்கள்" (மச்லி இக்தரியாதீ) இவருடைய சிறந்த படைப்புகளில் ஒன்று.

சுர்ஜீத் சிங் ஸேட்டி, அஜீத் கௌர், நிரஞ்சன் தஸ்னீம் ஆகியோர் தமது படைப்புகளுக்கு நகர வாழ்க்கையைக் கருப்பொருளாகக் கொண்டுள்ளனர். ஸேட்டி, தஸ்னீம் ஆகியோர்களின் சிருஷ்டிகளில் மேல்நாட்டு வாடை வீசுகிறது. உடல் விருப்பங்களுக்கு, உள இயல் வகையில் சமாதானம் கூறி, அவற்றை அந்தக் கட்டங்களிலேயே வைத்து விளையாட முனைகிறார்கள். இவர்களுடைய கதை மாந்தர்களில் பலர் பாதை விலகிய அறிவு ஜீவிகள். நேரான பாதையிலிருந்து விலகி நடப்பவர்கள், மொத்தத்தில் அசாதாரணமான பிராணிகள். இந்தப் பாத்திரங்களின் இயல்பில் நாம், இவர்களைப் படைத்தவர்களின் போக்கையும் புரிந்துகொள்ள முடிகிறது. இவை மட்டுமல்ல, இந்தப் புதினங்களில் பாஞ்சால மண்ணின் மணமும் இல்லை என்றே கூறலாம். "கல்லறை விளக்கு", "குறை நிலா இரவு", "இதுதான் வாழ்க்கை" ஆகிய நூல்களில் நாம் துய்க்கும் மண்ணின்

வாசனை, மக்களின் அக, புற இயல்புகள், எழில்நிறை காட்சிகள் ஆகியவற்றை நாம் ஸேட்டி, தஸ்னீம் ஆகியோரின் படைப்புக் களில் அனுபவிக்க முடியவில்லை.

பஞ்சாபி நவீனங்களில் சிறப்புமிக்க மரபு வடிவம் ஒன்று, தற்போதுதான் உருவாகி இருக்கிறது. அது தலீப் கௌர் டிவாணு, குருதயால் சிங் ஆகியவர்களின் மூலம்தான் வடிவம் பெற்றது என்று கூறுவது மிகவும் பொருத்தமாக இருக்கும். "கல்லறை விளக்கு", "நடக்க இயலாதது" ஆகிய புதினங்களின் மூலம் குருதயால் சிங் அவலச் சுவைமிக்க பூரண வடிவமுள்ள, மரபு பிறழாத நவீனங்களைப் படைத்திருக்கிறார் என்று உறுதியாகக் கூறலாம்.

குருதயால் சிங்கின் சிருஷ்டிகளில் கவிதை இருக்கிறது, சோகம் இழைகிறது, நடைமுறை வாழ்க்கை பளிச்சிடுகிறது. இவை யெல்லாம் ஒருங்கிணைந்து ஆழமான, மனிதாபிமானமிக்க பண்புகளை வெளிக்காட்டுகிறது.

'கல்லறை விளக்கில்' அவர், ஜக்ஸீர்சிங் என்ற கடை வகுப்பினனைக் காட்டுகிறார். ஆனால் அவனுடைய அனுபவங்கள் மிகவும் உன்னதமானவை. வாழ்க்கை நிலையும், உயர்கருத்துக்களும் ஒன்றுபடாது மோதுவதை, வெகு அற்புதமாகச் சித்திரிப்பதுதான் இந்தப் புதினத்தின் வெற்றி.

குருதயால் சிங், கல்லறை விளக்கிற்குப் பிறகு, 'நடக்க இயலாதது,' 'ஒருபிடி மண்', 'கெட்ட வேளை' ஆகிய நவீனங்களை வரைந்தார். 'நடக்க இயலாதது' (அண்ஹோயே) என்ற நவீனம் ஒரு மிகச் சிறந்த கலைப்படைப்பு. மனிதாபிமானமற்ற கும்பலுக்கு இடையே, கருணைமிக்க உள்ளம் படைத்த ஒருவன் எங்ஙனம் வாழ்க்கை நடத்துகிறான், தனது மன இயல்பின் விளைவாக எவ்வாறு வீழ்ச்சி அடைகிறான் என்பதைக் கலாபூர்வமாக ஆசிரியர் சித்திரிக்கிறார். ஒருபிடி மண், கெட்ட வேளை ஆகிய புதினங்களில், அவருடைய மற்ற படைப்புக்களின் உயரங்களைக் காண இயலவில்லை.

"குறை நிலா இரவு" ஆசிரியரின் ஐந்தாவது படைப்பாகும். "கல்லறை விளக்கு" "நடக்க இயலாதது" ஆகிய நவீனங்களில் அவர் தொட்ட உயரத்தை இதிலும் எட்டியிருக்கிறார். இது ஓர் அழகான கலைவடிவம். இங்கு பாஞ்சால கிராமவாசிகளின் வாழ்வு, உளவியல் ஆகியவற்றை ஒரு புதிய கோணத்திலிருந்து ஒளியிட்டுக் காட்டியிருக்கிறார். அந்த மாநிலக் கிராமவாசிகள் உணர்ச்சி

மிக்கவர்கள். எளிதில் அதற்கு ஆட்படுபவர்கள். ஆகவே, அடிதடி, மோதல், அதன் விளைவாக உயிர்ச்சேதம் ஆகியவை அங்கு மிக சகஜம்.

சட்டம், ஒழுங்கு ஆகிய துலாக்கோல்களின் துணையுடன், ஒரு நகரத்தானின் பார்வையோடு, இந்த வாழ்க்கையை அணுக முடியாது. அதனால் உயிர்க் கொலையை ஆசிரியர் ஆதரிக்கிறார் என்றோ, அதற்குச் சமாதானம் சொல்லுகிறார் என்றோ கூறிவிட முடியாது. தனக்குத் தவறிழைத்தவர்களைத் திருப்பித் தண்டித்து விடுவது அங்கு வாழும் மக்களின் இயல்பு, அவ்வளவுதான். அவர்களால் போலீஸ் வரும்வரை காத்திருக்க முடியாது. அவற்றின் அக, புற இயல் வர்ணனை, சோகமயமான படப்பிடிப்பு ஆகியவைதான் "குறை நிலா இரவு". இது மட்டுமல்ல, அந்தப் பிரதேசவாசிக்குத் தன் மண்ணின் மீது அளவில்லாத பற்று. அவன் தன்மானமுடையவன். 'அதற்கு ஹானி ஏற்படுகிறது' என்ற எண்ணம் எழும்பும்போது, அவன் பொங்குகிறான். உடனடியாகச் செய்கையில் குதிக்கிறான். அதன் விளைவுகளை ஓர் எழில்மிக்க எண்ணப் படைப்பாக மாற்றி இருக்கிறார், குருதயால், இந் நாவலில்.

திருமதி தலீப் கௌர் டிவாணாவும் ஐந்து புதினங்கள் எழுதியிருக்கிறார்: "அக்னிப் பரீட்சை", "நமது பாதை", "என் அடையாளம்", "இதுதான் நம் வாழ்க்கை", "ஆதவனும் கடலும்". இவருடைய படைப்புக்களில் வரும் பெண்கள் அனைவரும் வாழ்க்கைப் போக்கைக் கண்டித்து, எதிர்நீச்சல் போடுவர்களாக இருப்பார்கள். ஆனால் "இதுதான் நம் வாழ்க்கை"யில் வரும் நாயகி பாரோ, நீரின் போக்கிலேயே மிதந்து போனாள். எதிர்ப்படும் இன்னல்களைப் பொருட்படுத்துவதில்லை. உயிருள்ள சவமாக அவள் நடந்துகொள்ள முயல்கிறாள். எங்கேயாவது தப்பித்தவறி அவளுடைய வாழ்க்கை வேர்பிடித்து மண்ணில் ஒட்ட முயற்சிக்கும் போது, மீண்டும் ஒரு பேரலை வரும். அவளை நிலைகுலைக்கும்

இந்தப் புதினத்தின் மூலம், அவர் சொல்ல விரும்பும் செய்தி ஒன்றிருக்கிறது. அது, 'இந்தச் சமுதாயத்தில் பெண்களுக்கு நீதி வழங்கப்படவில்லை' என்பதாகும். வாழ்க்கை என்ற பெரு விளையாட்டில் அவள் வெறும் பகடை; எங்கே வேண்டுமானாலும் வைக்கலாம், நகர்த்தலாம். அந்த நிலை இன்றையப் புதிய கருத்தோட்டங்களினாலும் சிறிதும் மாறுபட்டு விடவில்லை என்பதை அவர் கவிதை மொழியில் ஒரு சோகப் பின்னணியுடன் காட்டியிருக்கிறார்.

தான் விரும்பாமலே வந்த கிராமத்தில் - தான் சீர்திருத்தி முன்னுக்குக் கொண்டுவந்த ஒரு வீட்டை விட்டு, நியாயமற்ற காரணங்களுக்காக வெளியேற்றப்படும்போது, பானோ, சமுதாய நியதிகள் அனைத்தையும் துறந்து, நடைப்பிணமாக வெளியேறிச் செல்லுகிறாள், குறையாடையுடன், தலையில் முக்காடு தரிக்காமல், வெறுங்காலுடன் அவள் வெளி நடக்கும் வர்ணனை, நம் நெஞ்சைப் பிழிகிறது. நமது அறவுணர்ச்சியைச் சீண்டி, தார்மீக ஆவேசத்தை வெளிக் கொணர்கிறது. அது படைப்பாளியின் மிகப் பெரிய வெற்றி.

மோகன் சிங்

# இதுதான் நம் வாழ்க்கை

அது ஒரு சிறிய கிராமம். சில வீடுகள் செங்கல்லும், காரையும் கொண்டு கட்டப்பட்டவை. மற்றவை களிமண்ணாலான சிற்றில்கள்.

கோணலும் மாணலுமான குறுக்குச் சந்துகள். அவற்றில் சேறும் சகதியும் நிரம்பிக் கிடக்கின்றன. சந்தின் மற்றொரு முனையில் பரந்த முற்றமுடைய நாராயண் அம்லியின் ('அம்லி' என்ற சொல் வழக்கு, எப்போதும் ஏதாவது ஒரு போதையில் மூழ்கிக் கிடப்பவரைக் குறிக்கும்) வீடு. அந்த மனிதர் எப்போதும் குடி போதையில் மூழ்கிக் கிடப்பார்.

அந்த மங்கை பானோ, வீட்டைக் கூட்டித் துப்புரவு செய்து கொண்டிருந்தாள்.....

தலையில் தொழுவச் சுமையுடன் வந்து கொண்டிருந்த தயாளு, ஸந்தியின் வீட்டிற்கு எதிரே நின்று குரல் கொடுத்தாள். "அம்மா, ஸந்தி! உனக்கு விவரம் தெரியுமா? கங்கையில் நீராடப்போன நாராயண் அம்லி, ஒரு பெண்ணோடு திரும்பி வந்திருக்கிறான்."

"தெரியும் மகளே" ஸந்தி கூறினாள். "கங்கையில் மூழ்கினால் பலனில்லாமல் போகாது என்று சொல்வார்களே!" தோல் வினைஞனின் மகனுக்கு ஒரு குவளை மோர் கொடுத்தவாறே பேசினாள் ஸந்தி.

"அந்தக் கடன்காரி எவன் வீட்டை நாசமாக்கிவிட்டு வந்தாளோ?, பார்ப்பதற்கு என்னமாய் இருக்கிறாள் என்கிறாய்?"– என்று அப்போது, அந்த வழியே வந்த வசனி கூறினாள். அவள் பள்ளிக்கூடம் போகும் தன் மகனின் முடியைச் சீராக்கிக் கொண்டிருந்தாள்.

"நான் சுவரிடுக்கு வழியாகத்தான் அவளைப் பார்த்தேன். எப்படி மாக்கு மாக்குன்னு வீட்டு வேலையெல்லாம் செய்கிறாள் தெரியுமா?

ஏதோ சொந்த வீடு பாழாய்ப் போவதைப்போல்" - தன் கோணல் கண்ணைச் சிமிட்டியவாறே கூறினாள் தயாளு.

வசனி தன் மகனின் தலையை வாரிக்கொண்டே பேசினாள் : "நீ சொல்வது உண்மை தயாளு. தினம் ஒரு புருஷனைத் தேடுகிற பெண் இப்படி உழைக்கமாட்டாள்."

"அம்மா! தலைமுடியை இப்படி இழுக்காதே" பையன் சிணுங்கினான்.

"உயிரே போவதுபோல் கத்துகிறாயே, ஒரே நிமிஷத்தில் மீண்டும் முடியைப் பறக்கவிட்டுக் கொண்டு ஓடி வருவாய்".

"பாவம்! அவளுக்கு வாழ்க்கையில் என்ன துயரமோ? இல்லா விட்டால், எந்தப் பெண்தான் சொந்த வீட்டைவிட்டு இன்னொருத் தனுடன் ஓடி வருவாள்?" - பறவைகளுக்கு இடுவதற்காக மக்காச் சோள ரொட்டியைத் துண்டு துண்டாய்ப் பிய்த்தவாறே பேசினாள் ஸந்தி.

"விவஸ்தை இல்லாத பேச்சு. இந்த நாளில் புத்தி பிசகுவதற்கு எத்தனை நேரம் பிடிக்கிறது. கைக்கோளன் உத்தமுடைய மகளின் நிலை என்ன? பெற்றோர்கள் முகத்தை வெளியில் காட்ட முடியாத படி செய்துவிட்டாள்." - தரையில் குளவி ஒன்று, குளிரில் விரைத்துப் போய்க் கிடந்தது. அதைத் தன் கால் செருப்பால் தேய்த்தவாறே கூறினாள் தயாளு.

கையில் ஒரு நீண்ட இரும்புக் கரண்டியுடன் வெளியில் வந்த பாரோவை அவர்கள் உற்றுப் பார்த்தனர்.

பாரோ சுவரினருகில் வந்து, அடுக்களைப் பக்கம் பார்த்தவாறு நின்றாள். "அம்மா! தீக்கங்கு இருந்தால் கொடுங்களேன்!" அவள் வேண்டினாள்.

"வேண்டியது" ஸந்தி பதிலிறுத்தாள். பாரோவின் எளிய முகத்தைக் கவனித்தவாறே கரண்டியை வாங்கிக் கொண்டாள்.

தலைச் சுமையை வீசுவதற்காகத் தயாளு அங்கிருந்து நகர்ந்தாள்.

மகனின் கேசத்திற்குக் கொண்டைபோட்ட வசனி, சீப்பில் 'ஏதாவது பேன் இருக்கிறதா' என்று ஆராய்ந்தாள்.

பாரோ நெருப்பை வாங்கிக் கொண்டு திரும்பிச் சென்றாள்.

"ஸந்தி அம்மா! நாராயணனின் இந்தப் புதுப் பெண்டாட்டி, பழைய துணியைத்தானே உடுத்தியிருக்கிறாள்? சீப்பிலிருந்த பேனைச் சொடுக்கியவாறே கேட்டாள் வசனி.

"மகளே! எல்லாம் இறைவனுக்குத்தான் வெளிச்சம். பார்ப் பதற்கு அவள் சாதுவாகத்தான் தெரிகிறாள்."

"இவர்களை எல்லாம் உங்களுக்குத் தெரியாது. எல்லாம் நடிப்பு. நடத்தை உள்ளவளாக இருந்தால், நாராயணனோடு ஏன் ஓடி வருகிறாள்? பெருவியாதிக்காரனிடம் யாராவது தின்பண்டம் வாங்குவார்களா? எத்தனை அழுக்குபிடித்த சமுதாயம்?"

"உண்மை, பொய் ஆண்டவனுக்குத்தான் தெரியும். பிள்ளைப் பிராயத்தில் பாதை தவறுவது சகஜம்தான். ஆனால் இவளைப் பார்த்தால், முதிர்ந்த பெண்ணாகத் தெரிகிறாளே. பானோவுக்கு முப்பது வயதாவது இராது?"

"ஏதோ போகட்டும், நாராயண அம்லிக்கு ஒரு வழி பிறந்தது. தினமும் தானே பொங்கித் தின்று கொண்டிருந்தான். இப்போது வயணமாகச் சாப்பாடு கிடைக்கும். சிறுவயதிலேயும் ஐநூறு ரூபாய் கொடுத்துத்தான் விவாகம் செய்து கொண்டானாமே!"

"ஆமாம், அப்பவும் இந்த ஏமாளியை அவர்கள் பழிகொட்டிக் கொள்ளவே செய்தார்கள். அந்தப் பெண் ஒரு ஓடுகாலி. ஒரு கணிசமான தொகையை வாங்கிக்கொண்டு, அவளுடையை பெற்றோர்கள் எவனுடனாவது அனுப்புவார்கள். அவள் இரண்டு மாதங்கள்கூடத் தங்கமாட்டாள். எங்கேயாவது ஓடிவிடுவாள். இதுவே அவர்களுடைய பிழைப்பாக இருந்தது..."

நீட்டி முழக்கிக்கொண்டு வசனி பேசத் துவங்கினாள் : "ஸந்தி அம்மா! பெற்றவர்கள் எங்காவது பெண்ணை இப்படிக் கேவலப் படுத்துவார்களா? ஒரு தடவை நான் என் பிறந்த வீட்டில் பஞ்சு சுத்தம் செய்து கொண்டிருந்தேன். அப்போது புதுக் கிராமத்துப் பரிகாரி அந்த வழியே வந்தான். கேணியில் ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்தைப் பார்த்துத் தண்ணீர் குடிக்க நுழைந்தான். ஏதோ திருமணத்தரகு (வட இந்தியக் கிராமங்களில் திருமணத் தரகில் ஈடுபடுவோர் பெரும்பாலும் நாவித வகுப்பைச் சேர்ந்த வர்களே, அவர்களுக்கு ஒரு சமுதாய முக்கியத்துவமும் உண்டு) விஷயமாக அலைந்து கொண்டிருந்தான் போலிருக்கிறது.

என்னைப் பார்த்துவிட்டு, இந்தமாதிரிப் பெண்ணுக்கு இரண்டாயிரம்கூடக் கொடுக்கலாம். ஆனால் அந்த ஊர்க்காரிக்கு ஐநூறுக்குமேல் யாரும் தரமாட்டார்கள் என்று, ஏதோ பேசிக் கொண்டே போனான். அது என் தாயாரின் செவியில் கேட்டு விட்டது. அவள் பொரிந்து கொட்டத் தொடங்கினாள்.

'ஐயா! பண்டிதரே!! என் மகளின் பக்கம் பார்வையை ஓட்டாதீர். மிகுந்த இக்கட்டான நிலைமையில்கூட நாங்கள் பரிசப் பணம் வாங்கவில்லை. இப்போதோ இறைவன் எங்களுக்கு ஒரு குறையும் வைக்கவில்லை.'

பரிகாரி பல்லிளிக்கத் தொடங்கினான். "உங்களைப்பற்றி அப்படியெல்லாம் பேசவேண்டா தாயே, நான் பொதுவாகக் கூறினேன்" என்று குழையடித்தான்.

"மகளே, இதிலிருந்துதான் குலப்பெருமை தெளிவாகப் புலனாகிறது." ஸந்தி பதிலிறுத்தாள்.

முற்றத்தில் நிறையப் பறவைகள் குழுமின. அவ்வளவும் ஸந்தி அம்மா இறைந்திருந்த ரொட்டித் துணுக்கைப் பொறுக்குவதற்காக.

உயர் குடும்பத்துப் பெண்களைப் போலத் தலையில் சேலைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு, வசனி நடைபயின்றபோது, அந்தப் புள்ளினங்கள் ஜிவ்வென்று எழுந்து, பக்கத்துச் சுவர் மேலும், கூரையிலும் அமர்ந்தன. அவள் திரும்பிய பிறகு, அவை மீண்டும் தரைக்கு வந்து, அந்தத் துணுக்குகளைச் சுவைக்கக் துவங்கின.

வீட்டு வேலைகள் எல்லாம் ஒரு வழியாக முடிந்த பிறகு, தன் வீட்டுக் களிமண் சுவரைத் தாண்டிப் பார்வையை ஓடவிட்டாள் ஸந்தி. அங்கேதான் பானோவின் வீடு இருந்தது. பிறகு என்ன தோன்றிற்றோ தெரியவில்லை சிறிது தயக்கத்துடனேயே பானோவின் வீட்டிற்குள் சென்றாள். அவள் பாத்திரம் துலக்கிக் கொண்டிருந்தாள்.

"குழந்தாய் பானோ, புது மருமகள் சில நாட்களாவது ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டும். நீயோ வீட்டுக்கு வந்தவுடனேயே வேலையில் ஈடுபட்டு விட்டாயே!" ஸந்தி பேச்சைத் துவங்கினாள்.

முற்றத்திலிருந்து தலையை நீட்டியவாறே பானோ கூறினாள் : "அதனால் என்ன அம்மா, வீட்டின் நிலைமை வெகு மோசமாக இருக்கிறதே"

"குழந்தாய், ஒரு வீட்டைச் சீராக்குவது பெண்ணின் கையில்தான் இருக்கிறது. பாவம்! இந்த நாராயணுக்கு யார் துணை இருந்தார்கள்? சிறுவயதிலேயே தாயார் போய்ச் சேர்ந்தாள். 'கர்த்தாரி' என்று ஓர் அக்கா உண்டு. அவளும் உத்திரப் பிரதேசத்திற்குப் போய்விட்டாள். அதுவும் வெகு தொலைவில் கிழக்கே. அவனுடைய தகப்பனும் போனபிறகு, இவனுக்கு எத்தகைய கட்டுப்பாடும் இல்லாது போய்விட்டது. கெட்ட சகவாசம், தீய நடவடிக்கைகள். கேட்க வேண்டுமா? நிலம் எவ்வளவு நாளைக்குத் தாக்குப்பிடிக்கும்? கொஞ்சம், கொஞ்சமாக

அடகு போயிற்று. ஏதோ கடவுள் புண்ணியம், தானியங்களின் விலை ஏறுமுகமாயிற்று. அதனால் நிலத்தை மீட்க முடிந்தது. நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது. நீ விவரம் தெரிந்தவள். இந்த நாளில் பெண் கொடுப்பவர்களும், வரனின் நிலையை ஆராய்ந்து பார்த்துத்தானே முடிவு செய்கிறார்கள்? அதுவும் இந்த மாதிரிப் பிள்ளையை யார் சீந்துவார்கள்."

"உட்காருங்கள் அம்மா!" பாரோ மணையை எடுத்துப் போட்டாள்.

"வேலை மலையாய்க் கிடக்கிறது, மகளே! எனக்கு அவசரமாகப் போகவேண்டும். வயலுக்கும் உணவு கொண்டு போக வேண்டியிருக்கிறதே! ஏனோ மனசு கேட்கவில்லை. புதிதாக இந்த வீட்டிற்கு வந்திருக்கிறாயே, உன்னைப்பார்ப்போம் என்றுதான் வந்தேன். கடவுள், உங்களை நல்ல நிலையில் வைக்க வேண்டும். உன் பிறந்த வீடு எந்த ஊர் மகளே!" அவள் வினவினாள்.

"பிறந்த வீடு..." அவள் தயங்கினாள். "அது ஜடிக் கிராமத்தில் இருக்கிறது." சாம்பல் படர்ந்திருந்த கைகளைக் கழுவியவாறே கூறினாள் பாரோ.

"அப்படியா!, காலையில் நெருப்பு வாங்க வந்தபோதே 'நீ சாதாரண கிராமத்தைச் சேர்ந்தவள் இல்லை என்பதைப் புரிந்து கொண்டேன். உன்னுடைய ஊர் வசதியுள்ளதுதான்." பாரோவின் கண்களில் நீர் முட்டியது. "பிறந்த ஊரில் என்ன இருக்கிறது அம்மா. ஓர் உடன்பிறந்தவன் இருந்தான். அவனுடைய காலமும் ஆகிவிட்டது."

"அப்படியா! மிகவும் வருந்தத்தக்க விஷயம்தான். அவனுக்கு என்ன ஆயிற்று?"

"எல்லாம் போதாத காலம், வேறென்ன சொல்வது? திருவிழாவுக்குத் தோழர்களோடு போனான், அங்கே நல்ல குடி. அந்தச் சாராயமும் யார் வீட்டிலோ தயாரித்தது. கொஞ்சம் கொஞ்சமாக அவன் உயிரைக் குடித்துவிட்டது. முதலில் காய்ச்சல் என்று படுத்தவன்தான், ஒரு வருஷம் முழுவதும் மிகவும் தொல்லைப்பட்டான்".

"நீ அவனை லூதியானாவுக்கு அழைத்துப் போயிருக்க வேண்டும். அங்கே ஒரு வெளிநாட்டு டாக்டர் இருக்கிறாராம். நிறையப் பணம் வாங்குவார் என்று கேள்வி. ஆனால் நோயாளிகளைப் பூரணமாகக் குணமாக்கி விடுகிறாராம்."

"அவரிடமும் காட்டினேம் அம்மா. ஆனால் அது ஒன்றும் சாதாரண நோயல்ல என்று தோன்றுகிறது. வீட்டிலிருந்ததை எல்லாம் சுரண்டி, மருத்துவத்திற்காகச் செலவு செய்தோம். ஆனால் எல்லாம் ஆண்டவனின் விளையாட்டு. வேறு என்ன சொல்வது. என் எதிரிக்குக்கூட இந்த நிலை வரவேண்டாம்".

"எல்லாம் அவன் செயல்தான் மகளே, கஷ்டம் வரும்போது யார்தான் கை கொடுக்கிறார்கள்?"

கோர்ட் வழக்கும், வியாதியும் எவருக்கும் வரக்கூடாதென்று சொல்வார்கள் அம்மா. தம்பியின் வைத்தியத்திற்காகக் கடைசிக் காசுவரை செலவழித்துவிட்டோம். முதலில் எருமையை விற்றோம், பிறகு உழவு மாடு, வயலில் வேலை செய்ய ஆட்கள் வந்தபோது, ஒரு பருக்கைகூட உண்ணாமல், என் தகப்பனார் வீட்டினுள் சென்று படுத்துக் கொண்டு விட்டார்"

"வாஸ்தவம் பானோ, ஜாட்டுகளுக்கு (பஞ்சாபில் உள்ள உழவர் இனம். இவர்களுக்கு நிலம்தான் எல்லாம்) நிலம்தானே உயிர்"

"அபபுறம் தம்பியை டெல்லிக்கு அழைத்துக் கொண்டுபோ; என்று சொன்னார்கள். அன்றாடச் சாப்பாட்டிற்கே அவலநிலை. அக்கம் பக்கத்திலெல்லாம் முழுகும்வரை கடன் வாங்கியாகி விட்டது. இதற்காக என் விவாகத்தைத் தள்ளிப் போட்டு கொண்டே வந்தார். எந்த மருந்தும் அவனுக்குப் பலன் தரவில்லை. மூச்சு இழுக்கத் தொடங்கிவிட்டது." ரொட்டி மூடுகிற துணியின் மேல் அரிவாள் மணையை வைத்துக் கீரையை அரியத் தொடங்கினாள் பானோ.

கடுகுக் கீரையைச் சீராக அடுக்கி பானோவின் பக்கம் நகர்த்திய வாறே பேசினாள் ஸந்தி. "நாராயணன் கொடுத்த தொகை எவ்வளவு?"

"அடடா உங்களுக்கு விஷயம் தெரியாதா? எனக்குக் கல்யாணம் நடந்தது மேரோ(ன்) வாலி கிராமத்தில். நாராயணன் எதற்குப் பணம் கொடுக்க வேண்டும்?" பானோ வினவினாள்.

"அப்படியா?" வியப்போடு கூறினாள் ஸந்தி.

"அவருடைய பெயர் சரவணன்." பானோ பெருமூச்செறிந்தாள். "உங்களுக்கு எப்படி விவரிப்பேன் அம்மா. அவரைப்போல இன்னொரு பிறவி இருக்க முடியாது."

"மேலே என்ன ஆயிற்று பானோ? நீ லேசுப்பட்ட பெண்ணில்லை என்று மட்டும் எனக்கு முன்னமே தோன்றியது."

"அவர்கள் ஐந்து அண்ணன் தம்பிமார்கள் இவர் ஒருவருக்குத் தான் திருமணமாகி இருந்தது. மற்றவர்கள் எல்லாம்.... தூ! சொல்லப்போனால், வெட்கம்."

"எத்தனை கொடுமை?" -ஸந்தி அங்கலாய்த்தாள். "இந்தப் பெண் ஜென்மமே, புண் ஜென்மம். எல்லாப் பெண்களையுமே சீதாதேவி சபித்துவிட்டாள் போலிருக்கிறது. புருஷன் வீடு போகாதவரை தான் பெண் மகளாக இருப்பாள். அதற்குப் பிறகு சீர்கேடுதான். பெண் நாயைச் சுற்றிவரும் தெரு நாய்களைப் போல-சீ- என்ன பிறப்பு வேண்டிக்கிடக்கிறது." ஸந்தி அலுத்துக் கொண்டாள்.

"நான் என் கணவனிடம் விஷயத்தைச் சொன்னேன். அவர் உடனே தனிக்குடித்தனம் வைத்துவிட்டார். ஒரு வருஷம் எங்கள் வீட்டில் சுகமாக வாழ்ந்தோம். அவரைப் பாராட்டத்தான் வேண்டும்.." கீரையிலிருந்த ஒருவேரை எடுத்துத் தூர எறிந்தாள். "அவருடைய வீட்டுக்காரர்கள் எல்லாம் எங்களுக்கு மிகுந்த தொல்லை கொடுத்தார்கள். ஆனால் நான் எவரையும் அணுக விடாமல் விரட்டினேன்"

"கடைசியில் வயலில் தண்ணீருக்காக ரகளை. சண்டை முற்றி, படாத இடத்தில் அடிபட்டுவிட்டது என்று தோன்றுகிறது, ஆண்டவனுக்குத்தான் தெரியும். எத்தனையோ மருத்துவர்களிடம் போனோம், ஒன்றும் பிடிபடவில்லை. சரியாகப் பத்தே நாள். என் புருஷன் போய்விட்டார்." பானோவின் கண்களில் நீர் பெருக்கெடுத்தது.

"அழாதே பானோ," ஸந்தி அவளைத் தேற்றினாள். "இறைவனின் சித்தத்திற்கு எதிரே, மனிதன் ஏதும் செய்துவிட முடியாது. பத்தொன்பது வயது மகனைப் பறிகொடுத்துவிட்டு, நானும் பரிதவித்துக் கொண்டிருக்கிறேன். சிங்கக் குருளையைப் போன்ற உடல்வாகு, ஈட்டியைப் போலப் பாய்வான், வெள்ளியைப் போன்ற பளபளக்கும் மேனி, எத்தனை பேர் பெண் கொடுக்க முன் வந்தார்கள் தெரியுமா? நாலே நாள் காய்ச்சலில் போய்விட்டான். நினைத்தாலே நெஞ்சு பொங்கி வருகிறது. ஆனால் எந்தக் காரியத்தைத் தள்ளிவிட முடியும்? உயிர், உடம்பில் ஒட்டிக் கொண்டிருக்கும்வரை எல்லாப் பணிகளையும் செய்துதானே தீரவேண்டி இருக்கிறது?" ஸந்தி முந்தானையில் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"சரவணனின் தம்பிகளில் ஒருவனை மறுமணம் செய்து கொள்ளும்படி பலபேர் சொன்னார்கள். எனக்கு மனம் இடம்

கொடுக்கவில்லை. அங்கேயே இருந்தால் கண் முன்னால் எரிகிற சிதை எப்போதும் காட்சி கொடுக்கும். சரவணன் ஆழமான உணர்ச்சிகள் உடையவர். அவரால் எதையும் மறக்க இயலாது. அடிக்கடி நான் என்னையே நொந்துகொள்கிறேன். நான் இந்தக் குடும்பத்திற்குள் காலடி எடுத்து வைத்திராவிட்டால், அண்ணன் தம்பிகளுக்குள் பூசலும் ஏற்பட்டிராது. ஒருவேளை அவரும் போயிருக்க மாட்டார்" பேச்சுவாக்கில் கீரை நறுக்கிக் கொண்டிருந்த விரலை வெட்டிக் கொண்டுவிட்டாள் பாரு. அதை மற்ற கையினால் அழுத்திப் பிடித்தாள்.

"அடாடா, காயம்பட்டுவிட்டதா? அரிவாள்மனை ரொம்பவும் கூராக இருக்கிறதென்று எண்ணுகிறேன்."

"அவ்வளவு கூர் என்று சொல்ல முடியது. ஏனோ காயம் பட்டுவிட்டது."

"இப்படி நெஞ்சிலே சுமையை ஏற்றிக் கொண்டிராதே பாரு. அன்று எழுதியதை யாரும் மாற்றிவிட முடியாது. எதெது எப்படி நடக்க வேண்டுமோ, அப்படியேதான் நிகழும். ஆண்டவன்மேல் பாரத்தைப் போட்டு நாளை எண்ணிக் கழிக்க வேண்டியதுதான்."

"நான் எண்ணியதெல்லாம் அதேதான் அம்மா. எப்போது அவரே இல்லையோ, அந்த ஊரில் என்ன இருக்கிறது? ஆனால் குடும்ப கௌரவம் பாழாகிவிடக் கூடாதென்று அவருடைய தம்பிகள் நினைத்தார்கள்."

"நாராயணன் வருகிறார் போலிருக்கிறதே! நான் போய் வருகிறேன்." ஸந்தி எழுந்து வீட்டைவிட்டு வெளியேறத் தொடங்கினாள். "அடுத்த வீட்டில்தான் இருக்கிறேன். அவசர வேளையில் ஏதாவது தேவைப்பட்டால் எனக்குக் குரல் கொடு." அவள் வாசல் கதவைக் கடக்கும் நேரத்தில் நாராயணன் எதிர்ப்பட்டான்.

"ஸந்தி அண்ணி வணக்கம், புறப்பட்டு விட்டீர்களா?"

"ஆண்டவன் உன்னைக் குறை ஏதுமின்றி வைக்கட்டும் நாராயணா. உன் புதுப் பெண்டாட்டியைப் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்."

"பிடித்திருக்கிறதா? அண்ணி?"

"பாவம், ரொம்ப நல்லவள்."

"நல்லவளோ, கெட்டவளோ, கங்கையில் நீராடச் சென்றதற்குப் பலன்."

"நீ யாருக்கும் பணம் ஏதும் தரவில்லை என்று சத்தியம் செய்வாயா?"

"பரம சத்தியம் அண்ணி. உண்மையிலேயே கங்கைத் தாய்தான் அவளை எனக்கு அளித்தாள்."

"அப்படியானால் சரிதான் தம்பி. ஆனால் முன்மாதிரிக் கவலையின்றித் திரியாதே. குடும்பத்தை ஒழுங்காக நடத்த வேண்டும்.

"முன்போல் இருப்பதில் எனக்கும் விருப்பம் இல்லை அண்ணி."

"எனக்கு எல்லா விவரமும் தெரியும். என்றாலும் கண்டும் காணாததுபோல் இருந்தேன். இனி அப்படி நடக்காதே."

"கோயிலுக்கு விட்ட மாட்டை யாராவது வீட்டில் கட்டிப் போட முடியுமா அண்ணி?"

"நான் அதிகம் பேச விரும்பவில்லை. இந்தப் பெண் நல்ல குணமுள்ளவளாகவே தோன்றுகிறாள்."

"அதனால்தான் அவளை அழைத்துக் கொண்டு வந்தேன். என் காலம்தான் ஆகிவிட்டதே."

"அப்படியெல்லாம் ஒன்றும் கிடையாது நாராயணா. உன் வயல் மீண்டும் பசுமையாக வேண்டும் என்பதுதான் என் பிரார்த்தனை."

"இன்று தண்ணீர் இறைக்கிறார்களா?" நாராயணன் பேச்சை மாற்றினான்.

"இல்லை, களை எடுக்கப் போயிருக்கிறார்கள்"

....மெள்ள மெள்ள ஒளிமங்கி, இருள் கப்பிக் கொண்டது. நீண்ட இரவு, கடுங்குளிர், குதிரை லாயத்தைப் போன்ற கரடு முரடான தரையுடைய வீடு.

இரவினிருளில் குறுக்கும் நெருக்கும் ஓடும் எலிகள் பாத்திரங்களின் மேல் மோதி ஓசை உண்டாக்கின.

மூலையில் கட்டப்பட்டிருந்த எருமையின் கண்கள் அந்த இருட்டிலும் பளபளத்தன.

வீர் வீரென்று அடித்த காற்றில் கூரையே மேலே சாய்ந்துவிடும் போலத் தோன்றியது, பாருவுக்கு.

பக்கத்துக் கட்டிலில் படுத்திருந்த நாராயணனின் கையை உலுக்கியவாறு வினவினாள், பாரு : "தூங்கி விட்டீர்களா?"

"இல்லை, என்ன விஷயம்?"

"ஒன்றுமில்லை, எனக்குப் பயமாக இருக்கிறது!"

"பேசாமல் தூங்கு, மனிதன் வாழ்கிற வீட்டில் எதற்காகப் பயப்பட வேண்டும்?"

"முன்பெல்லாம் நான் எதற்கும் கலங்காமல்தான் இருந்தேன். ஆனால்....." தொடங்கிய சொல்லை பாரு முடிக்கவே இல்லை.

போர்வையை முகத்திலிருந்து விலக்கிக் கொண்டு வினவினன் நாராயணன் : "ஒரு விவரம் சொல்லுவாயா, பான்?"

"நீங்கள் என்னை பானு என்றே கூப்பிடுங்கள்"

"ஏனும்".

"அப்படித்தான்"- பானு மெத்தைப் போர்வையை (ரஜாயி) இழுத்து மூடிக்கொண்டு பதிலுறுத்தாள்.

"சரவணன், உன்னை 'பான்' என்று அழைப்பது வழக்கமா"

"ஆமாம்"

"நான் அந்தப் பெயரால் அப்படி அழைக்க வேண்டாமா?"

"மறைந்து போனவர்களின் பேச்சும் அவர்களுடனேயே போய்விடுவது நல்லது."

"பல சமயங்களில் நீயும் ஏதோ ஆவி வசப்பட்டவள் போலத் தான் தோன்றுகிறாய். மாக்கு மாக்கு என்று எல்லா வேலைகளையும் செய்து தீர்த்துவிடுகிறாய். ஆனால் பக்கத்தில் படுத்துக் கொண்டால் அந்த இடம் காலியாகவே தோற்றமளிக்கிறது. நீ வேறு எங்கேயோ போய் விடுகிறாய்."

பானு மறுமொழி ஏதும் பேசவே இல்லை.

"பானு! நீ ஏன் புதுத்துணிமணிகளை உடுத்திக் கொள்ளுவதே இல்லை. எல்லாம் பெட்டிக்குள்ளேயே கிடக்கிறதே!"

"இப்போது நான் உடுத்தியிருப்பதில் கிழிசலேதும் இல்லையே!"

"பானு?"

"சொல்லுங்கள்"

"நீ சந்தோஷமாக இருக்கிறாயல்லவா?"

"எனக்குத் துயரம் வருவானேன்?'

"பல தடவை உன்னைக் கவனித்திருக்கிறேன்; இரவில் தூங்குவதே இல்லையே !"

எனக்கு மிகக் குறைவாகத்தான் உறக்கம் வரும். அந்த நாளில் அதிகமாகத் தூங்கிவிட்டேன். அவர் பாவம் பலமுறை ஏமாந்து போயிருக்கிறார்."

"யாரு சரவணனா?"

"ஆமாம், என்னை உசுப்புவார். எழுந்திருக்கிறேன் என்று சொல்லிவிட்டு, மீண்டும் உறங்கிப் போவேன். அலுத்துப்போய் அவரே தேனீர் தயாரித்து விடுவார்."

"பானு, இப்போது சரவணன் எங்கிருந்தாவது வந்துவிட்டால், நீ என்னை விட்டுப் போய்விடுவாயா ?"

"வேடிக்கைதான். இறந்தவர்கள் எப்போதாவது மீண்டும்

வருவதுண்டா? அங்கே போய்த்தான் கேட்கப்போகிறேன். எதற்கு, என்னை தேடித் திருமணம் செய்து கொண்டீர்களென்று!"

"அங்கே உன்னை எதிர்பார்த்து உட்கார்ந்திருப்பானே அவன். எவளுடைய கர்ப்பத்திலோ முளைத்திருப்பான்."

அந்த இரவின் இருளெல்லாம் திரண்டு, அவள்மேல் கப்பியதைப் போல் தோன்றியது பானுவுக்கு.

சில கணங்கள் அமைதியாக இருந்தபிறகு, மீண்டும் வினவினாள் பானு. "நான் உங்கள் கட்டிலில் வந்து படுத்துக் கொள்ளட்டுமா?"

"ஒரே ஒரு நிபந்தனை. என் கட்டிலுக்கு வந்தால் உறங்கிப் போய் விடக்கூடாது. அதில் ஒரு மந்திரசக்தி இருக்கிறது. கட்டிலுக்கு வந்தவுடனேயே எவரும் தூங்கி விடுவார்கள்."

"உங்களிடம் படுத்துக்கொண்டால், எனக்கு ஏனோ பயமே தோன்றுவதில்லை."

"நீ என்ன, இன்னும் சிறு குழந்தையா?"

"அதைத்தான் பலமுறை எண்ணிப் பார்க்கிறேன். நான் ஒன்றும் குழந்தை இல்லையே."

"நீ, மாலையில் எங்கே இருந்தாய் பானு? எனக்கு ஒரு கோப்பை தேனீர் வேண்டி இருந்தது. வெகு நேரம் காத்திருந்தேன்." "

"வெளியே போயிருந்தேன்"

"அவ்வளவு நேரமா?"

"அங்கே என் தோழி சியாமாவைச் சந்தித்தேன். அவளும் மோரா(ன்)வாலி கிராமத்தைச் சேர்ந்தவளல்லவா?"

நாராயணன் மறுபக்கம் புரண்டு முகத்தைத் திருப்பிக் கொண்டான். "மோரா(ன்) வாலி மேல் அவ்வளவு பிரியமிருந்தால் நீ அங்கேயே போய்விடலாமே!"

பானுவின் மனம் திடீரென்று மாறுபட்டது. சற்று முன்பு 'உங்கள் கட்டிலுக்கு வந்துவிடட்டுமா' என்று உறவு கொண்டாடிய நாராயணன், தற்போது வேற்று மனிதனுகத் தோற்றமளித்தான். அவள் எழுந்திருந்து, விளக்கில் எண்ணெய் ஊற்றி அதைப் பொருத்தினாள்.

முந்தினநாள் மாலை அவள் செம்மையாகத் துலக்கி மரப்பலகை மேல் வைத்திருந்த பாத்திரங்கள் விளக்கொளியில் மின்னின. பெட்டிகளின் மேல் இராட்டினம் கிடந்தது. அவள், அதில் பல இரவுகள் வெகுநேரம் வரையில் நூல் நூற்பது வழக்கம். மூலையில் கட்டப்பட்ட எருமை, கதவோரத்தில் அவளுடைய காலணிகள்.

விளக்கின் ஒளி பரவத்தொடங்கிய பிறகு அங்கு சாதாரண நிலை மீண்டும் தோன்றியதை அவள் கண்டாள்.

காலியாகிக் கிடந்த எருமையின் கவனையில் வைக்கோலை இட்டாள். அதனுடைய உடலைத் தடவிக் கொடுத்தாள். கட்டிலில் கிடந்த மேலாடையை எடுத்துத் தரித்துக் கொண்டாள்.

"மறுபடியும் விளக்கை ஏற்றிவிட்டாயா?" கோபத்தை அடக்கிக் கொண்டு கேட்டான் நாராயணன்.

"ஆமாம்" அவள் அடுப்பிற்குள் வரட்டித் துண்டுகளைத் திணித்தவாறே கூறினாள். "சில சமயங்களில் நான் நிலை தடுமாறி விடுகிறேன். அடடா! மாட்டுக்குப் பயறு நனைக்கக்கூட மறந்து போனேன்."-வாணையில் பயறை இட்டவாறு பேசினாள்.

"உனக்கு ஏதாவது நினைவில் இருக்கிறதா? அல்லது எல்லா வற்றையுமே மறந்து விடுகிறாயா?" நாராயண் தன் இடுப்பில் சொருகியிருந்த பல்லுப்போன சீப்பை எடுத்துத் தலையை வாரிக் கொண்டவாறே கேட்டான்.

"என் ஞாபக சக்தியில் இடிவிழ, எனக்கு என்ன ஆயிற்று என்றே புரியவில்லை."

"மனம் இங்கிருந்தால் உடம்பு உடனில்லை"

"இங்கே இல்லாமல், எங்கே தொலைந்து போகிறது? கிணற்றிலா?"

"இரண்டு மாதமாக உன்னோடு பழகுகிறேன், உன் எண்ணப் போக்கு எனக்குப் புரியவே மாட்டேன் என்கிறது."

"யார் மூலமாவது, என் தகப்பனார் எப்படி இருக்கிறார் என்று தகவல் விசாரியுங்களேன்."

"உணர்வோடுதான் பேசுகிறாயா? இன்னுமா உனக்கு அப்பாவின் பாசம் அகலவில்லை?"

அப்பா கெட்ட மனிதர் இல்லை. தம்பி போகர் போன பிறகே அவருடைய நினைவு பிசகிவிட்டது. யார் எதைப் பேசினாலும் அதையே திருப்பிச் சொல்லத் தொடங்குகிறார்."

"உன்னை இரண்டாம் முறையும் விற்பதற்கு ஏற்பாடு செய்தார். நீ அவரை நல்லிதயம் படைத்தவர் என்கிறாய்.

"அவர் என்ன செய்வார்? பாவம்! தான் கண்ணை மூடிவிட்டால், என் நிலை என்ன ஆகுமோ என்ற கவலை அவருக்கு. மரியாதையாக திருப்பி அனுப்பு, அல்லது நாங்கள் பானுவைத் தூக்கிக் கொண்டு போய்விடுவோம் என்று, என் மாமனார் வீட்டிலிருந்து செய்தி வந்த வண்ணம் இருந்தது."

"அதனுல்தான் உடனடியாகப் பணம் பண்ணிவிடலாமென்று நினைத்தாரா?

"உங்களுக்கு நாங்கள் அனுபவித்த துயரங்களைப்பற்றி என்ன தெரியும். நான் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தேன். இருட்டிய பிறகு வீட்டைவிட்டே நகரமாட்டேன். என் அப்பா கிழவர். அவர் என்ன செய்யமுடியும்? யாராவது இரண்டு தட்டுத் தட்டினுலே விழுந்துவிடுவார். கிராமத்தில் உடன் பிறந்தவரின் உதவி இல்லாமல், யாரும் வாழ்ந்து விடமுடியாது".

"நீ ஒரு மூளை கெட்டவள். ஒரு பெண்ணின் விருப்பம் இல்லாமல் அவளைச் சூழ்ந்திருக்கும் காற்றைக்கூட யாரும் தீண்ட முடியாது."

"நீங்கள் தெரியாமல் பேசுகிறீர்கள். உடன் பிறந்தவனின் மனைவியையே..."

"விடு சனியனை. எப்போது பார்த்தாலும் அந்த அழுகைதானு?"

"என்ன செய்யலாம், அந்த நினைவுகள் என் நெஞ்சிலேயே அழுந்திக் கிடக்கின்றன. நான் எவ்வளவோ சமாதானம் செய்து கொண்டு பார்க்கிறேன். எப்படி அழுதாலும் போனது திரும்பப் போவதில்லை. இறைவன் ஏதோ நல்ல கதியைக் கொடுத்தானே என்று நன்றி செலுத்த வேண்டும் அவனுடைய ஒளியில் எதுவுமே வேண்டாமல் ஒடுங்கி விடுவதுதான் நிம்மதி."

"சரி, இனியாவது தூங்கு-போ."

"நான் பேசுவது பிடிக்காவிட்டால் என்னிடம் சொல்லிவிடுங்கள். என்மனம் ஒரு நிலையில் இல்லை என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே!"

"பானு!"

"ஏன்?"

"சில சமயங்கிளில் ஓரிரண்டு மிடறு சாராயம் அருந்துகிறேன் அல்லவா? அதனுல் தலைமுடி வெளுத்துவிட்டது. மற்றபடி எனக்கு வயது ஒன்றும் அதிகமாகி விடவில்லை. நீ நினைத்திருப்பாய் இவன் ஏதோ..."

"இல்லை! இல்லை!! சத்தியமாகச் சொல்லுகிறேன் நான் அப்படி எண்ணியதே கிடையாது. இந்த நாளில் முடி வெளுப்பதற்குக் கேட்பானேன். சின்னச் சின்னப் பெண்களுக்குக்கூடத் தலை நரைத்து விடுகிறது."

"பானு!"

"என்ன வேண்டும்?"

"மாலையில் ஒரு பொம்மைக்காரி, மண் பொம்மைகள் எல்லாம் விற்றாளே, கவனித்தாயா?"

"பார்த்தேனே!"

"நீ ஏன் ஒன்றும் வாங்கவில்லை?"

"நம் வீட்டில் விளையாடுவதற்கு யார் இருக்கிறார்கள்.?"

"இப்போது இல்லாவிட்டால் என்ன, வரவே மாட்டார்களா?"

பானோ பதில் ஏதும் சொல்லவில்லை.

"பானோ!"

"சொல்லுங்கள்."

"உனக்கும் குழந்தை வேண்டுமென்று ஆசை இல்லையா?"

"அவர் போனபோது எனக்கும் தோன்றத்தான் செய்தது. அவர் ஏதாவது அடையாளம் கொடுத்துவிட்டுப் போயிருக்கக் கூடாதா என்று. அதற்கு பின்னால்...பின்னால்"

"பானோ, பழைய பேச்சை விடு. இன்றைய நிலையைப் பற்றிப்பேசு.

"உங்களுக்கு விருப்பம் இருக்குமானால் இறைவனின் அருளால் அப்படியே நடக்கும். ஆனால் என்னைப் பொருத்தவரையில் சரவணனோடு எல்லாமே போய்விட்டதைப் போலத் தோன்று கிறது. என்னுள் எல்லாம் காய்ந்துவிட்டது. அங்கே என்ன கொடி தழைக்கும்?

"கடவுள் எல்லாம் நல்லதே தருவார். நீ மட்டும் முரண்டு பிடிக்காமல் இருந்தால்..."

"முரண்டு பிடித்து நான் எந்தக் கிணற்றில் விழுவது? எனக்கு யார் இருக்கிறார்கள்?"

"பெண் பிள்ளைகள் எல்லாம் செய்துகொள்ள முடியும். இரண்டு மாதங்களுக்கு முன்னால் உனக்கு என்னைத் தெரியுமா?"

வசமாகத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று அவளுக்குத் தோன்றியது. தான் வேறு மாதிரிப் பெண் என்று சொல்லி யிருப்பாள். என்றாலும் தன்னைத்தானே அடக்கிக் கொண்டாள்.

"பானோ?"

"சொல்லுங்கள்"

"கோபமா?"

"நான் யாரிடம் கோபித்துக் கொள்வது ?"

"என்னிடம்தான்."

"மாட்டேன்". பிறகு அவள் தொடர்ந்து பேசினாள்: "அந்தப் பெண் ரலி கால்படி நெய் வேண்டுமென்று கேட்டாள். அவளுடைய

[illegible] லையாம். மருந்துக்கு வேண்டுமாம்."

"கொடுப்பதற்கென்ன?"

"உங்களைக் கேட்டுக் கொண்டு தருவதாகச் சொன்னேன்"

"பாரு, இந்த வீடு இனி உன்னுடையது. உன் இஷ்டப்படி செய்யலாம்."

"சரவணனும் அப்படித்தான். என்னை எந்த விவகாரத்திலும் தடைசெய்தது கிடையாது. என்றாலும் உங்கள் விஷயத்தில்..."

"பாரு!" நாராயணன் உரத்த குரலில் கூவினான்.

"சொல்லும் ஐயா." மெதுவான குரலில் அவள் பதிலுறுத்தாள்.

"என் முன்னால் இனி சரவணன் பெயரை எடுக்காதே."

"அப்படியே"- அவள் சொல்லிவிட்டு, வாயில் ஊதி விளக்கை அணைத்தாள். பிறகு நகர்ந்து நகர்ந்து தன் கட்டிலுக்கு வந்து சுருண்டு படுத்தாள்.

படுத்த பிறகு அவளுக்குத் தன் தாயின் கூற்று நினைவுக்கு வந்தது. விளக்கை வாயினால் ஊதி அணைப்பது ஆகாது என்று அவள் சொல்லிக் கொடுத்திருந்தாள்.

நன்றாகப் பூசி மெழுகிய வீடு. உட்புறம் துப்புரவு செய்யப்பட்டு தரையிலே உட்கார்ந்து உணவு கொள்ளுமளவிற்குத் தூய்மையாக அமைந்திருந்தது. கலைத்திறமை மிக்க பெண்ணின் கையினால் அமைக்கப்பெற்ற மயிலுருவம் இழைத்த பீடம். அதன்மேல் பளபளப்பாகத் துலக்கப்பட்ட பாத்திரங்களின் அடுக்கு. நல்ல அமைப்புள்ள அடுப்பு. அதில் தயாராகிக் கொண்டிருக்கும் கீரையிலிருந்து வெண்ணிற ஆவி எழுகிறது. அதில் இட்டுக் கடைவதற்காக வெள்ளை உள்ளியை உரித்துக் கொண்டிருந்தாள் பாரு.

பளிச்சென்ற ஆடையுடுத்தி ஹுக்காவை உறிஞ்சிக் கொண்டிருந்தான் நாராயணன். காலில் தைத்த முள்ளை எடுத்துக் கொள்வதற்காக அங்கே வந்த ஸந்தி, "உனக்குப் பொன்போலப் பெண்டாட்டி கிடைத்திருக்கிறாள் நாராயணா!" என்று உணர்ச்சியுடன் கூறினாள்.

"ஏகத் தாறாகப் புகழ்ந்து அவளுக்கு மண்டைக் கனம் ஏறும்படி செய்துவிடாதே அண்ணி!"

"அட போக்கற்ற மனுஷா, நீதான் மண்டைக் கிறுக்குப் பிடித்துப்போய் கிடக்கிறாய். எப்போது பார்த்தாலும் ஏதாவது போதை. உடம்பை என்னமாகக் கெடுத்துக் கொண்டிருக்கிறாய்! முகம் உலர்ந்துபோய்க் கிடக்கிறது. கையும் காலும் நாணல் தட்டையைப்போல. பாலோ தயிரோ சாப்பிட்டு உடம்பை வளர்ப்பவர்களைப் பார்த்திருக்கிறேன். அதுதான் நல்வழி."

"இவள்தான் எப்போதும் இடித்துக் காட்டிக் கொண்டு இருக்கிறுள் என்றால் நீயும் தொடங்கிவிட்டாயா? நான் யாரிடம் என் குறைகளைச் சொல்லுவேன். அப்பனுமில்லே. உடன்பிறந்தவனு மில்லே."

"இடித்துக் கூறுபவள்தான் நல்லவள். நீ அதற்கேற்ற ஆசாமி தான். இந்தப் போதையில் அப்படி என்ன வைத்திருக்கிறது? அபினி, இல்லாவிட்டால் சாராயம். அதுவும் தப்பினால் புகையிலே, இப்படி ஏதாவது உன்னே மாறிமாறி ஆட்டிவைக்கிறது."

"நான் எப்படிச் சொல்லுவேன் அம்மா. குருத்வாராவுக்கு என்னுடன் வந்து இனிக் குடிப்பதில்லே என்று சத்தியம் செய்து கொடுத்தார். இரண்டுநாள்கூடத் தாக்குப்பிடிக்க முடியவில்லே. ஆலயத்தில் செய்து கொடுத்த சத்தியத்தையும் மீறியாயிற்று." பாஞே அவளிடம் புகார் கொடுத்தாள்.

ஹீக்காவின் குழலில் வாயை வைத்து, தீர்க்கமாக உறிஞ்சினான் நாராயணன். "எனக்கென்னவோ, கடவுளும் கூட இரவும் பகலும் போதையில் மூழ்கிக்கிடப்பதைப் போலத்தான் தோன்றுகிறது. அதனால்தான் சமுதாயத்தில் இப்படி இருள் சூழ்ந்து கிடக்கிறது." அவன் கூறினான்.

"உளறுதே முட்டாள். கடவுளைப் பற்றியாவது கண்ணியமாகப் பேசக் கற்றுக்கொள். அவருடைய செய்கைகளைப்பற்றி நமக்கு என்ன தெரியும்?"

"இதோ அம்மா, முள்ளை எடுத்துவிட்டேன். ஊசியை ஸந்தியிடம் திருப்பிக் கொடுத்தாள் பாஞே.

"நீ எல்லா சௌபாக்கியங்களும் பெற்று வாழவேண்டும் மகளே! இறைவன் உனக்கு ஒரு மகனைக் கொடுக்கட்டும். வீட்டில் மங்களம் பொங்கட்டும். பிறகு இவன் எங்கே வேண்டுமானாலும் போய் முட்டிக்கொள்ளட்டும் பரவாயில்லே."

"உனக்கு ஒன்றுமே தெரியாது அண்ணி. இவள் என்னேயும் ஒரு குழந்தையைப் போலவே விரட்டுகிறுள். துவைத்த துணியை உடுத்து! செருப்பை இங்கே கழட்டிப் போடு. கடைக்குப்போய் சாமான் வாங்கி வா... இதோ இங்கே எண்ணெய் எடுக்க எள் வைத்திருந்தேன். எள்ளுருண்டை செய்யப் போகிறுளாம். எள்ளை இடித்துத் தரச் சொல்லுகிறுள்." அவன் அதைக் கலுவத்தில் இட்டு இடிக்கத் துவங்கினான்.

"போடா முட்டாள் அவள் வீட்டிற்கு வந்ததிலிருந்து உன்னை மனிதனாக மாற்றிக் கொண்டுதான் வருகிறுள்."

"அப்படியானால் நான் மனிதனாக இருக்கவில்லையா?"

அடுப்பு நெருப்பைத் தணித்தாள், பாரோ. "பெரிய அண்ணி உங்களைக் கண்டித்தால் ஒன்றும் குறைந்து விடாது." ஸந்தியைப் பார்த்தவாறே கூறினாள் அவள்.

"ஒரு விஷயத்தை உனக்குத் தெளிவாக்கி விடவேண்டும், நாராயணா. உனக்கு அது எப்படிப்பட்டாலும் எனக்குக் கவலை இல்லை. கெட்ட சவகாசமெல்லாம் இனி வேண்டாம். கண்டவர்களை எல்லாம் வீட்டிற்கு அழைத்து வராதே. கடவுளின் கிருபையினால் உனக்கு நல்ல மனைவி அமைந்து விட்டாள். இது ஒரு கண்ணியமான வீடு. திரிந்தலைபவர்களின் குடிசை இல்லை. இனியாவது நல்ல குடும்பஸ்தனாக வாழவேண்டும்."

"நான் எந்தக் காலிப் பயலையாவது வீட்டிற்கு அழைக்கிறேனா? தானாக வந்து விடுகிறார்கள்."

"நீதான் அவர்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். குடும்பப் பெண்கள் வசிக்கும் இடத்தில் கூடிச் சாராயம் குடிக்கக்கூடாது. அப்படிக் குடிக்க வேண்டுமானால், குருத்வாராவுக்குப் பக்கத்துக் கடைக்குப் போகலாம், இல்லையானால் பாபாவின் கூடாரத்தில் சென்று குடிக்கலாம், என்று கூறவேண்டும்."

"நான் இருபது தடவை எடுத்துச் சொல்லியாகி விட்டது. ஆனால் கேட்பவர்கள் யார்?" நாராயணனிடமிருந்து கலுவத்தை வாங்கிக் கொண்டு வேகமாக எள்ளை இடித்தவாறே பேசினாள் பாரோ. "நீங்கள் ஓரிரு மிடறு விழுங்கியதும் நினைவு தப்பிப் போகிறீர்கள். அந்தத் தோழர்கள் விழிகளை உருட்டி, உருட்டி வீடு முழுவதும் பார்வையால் நோண்டுகிறார்கள்."

"உளறிக்கொண்டே போகிறாயே! இந்தத் தேவகன்னிகையைக் கண்டுதான் அவர்கள் மயங்கி விழுகிறார்களாக்கும்."

"குடித்த பிறகு எவருக்காவது அறிவு நிதானமிருக்குமா நாராயணா?"

"அறிவுக்கு என்ன கேடு வந்துவிடும் அண்ணி?"

"உன் குடும்ப கௌரவத்தைக் கெடுத்துத் தீர்ப்பதாகக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாயா?"

"சரி; இனிமேல் நான் அவர்களைக் கண்டித்து வைக்கிறேன். ஆனால் நீயும் இவளுக்குச் சொல்லி வை. எங்கேயாவது பஜனை, வழி பாடு என்று இருந்தால் போதும், இவள் அங்கேயே சரணடைந்து விடுகிறாள். அவர்களுடைய தாலங்களைக் கழுவுகிறேன், காலணிகளைத் துடைக்கிறேன், என்று நாள் முழுவதும் அங்கேயே

பழியாய்க் கிடக்கிறாள். நான் பட்டினியில் வாடி மடிந்தாலும் இவளுக்குக் கவலை இல்லை."

"அவள் செய்வதில் தவறு ஏதுமில்லை நாராயணா, அடுத்த பிறப்பைப்பற்றியும் சிறிது சிரத்தை எடுத்துக்கொள்வது நல்லது தான். கடந்த பிறப்பில் என்னவெல்லாமோ செய்துவிட்டு இப்போது கஷ்டப்படுகிறோம். இந்த மாதிரிப் பொறுமையும் பயிர்ப்பும் உள்ள பெண்களை உலகமே காலைத்தொட்டு வணங்குகிறது."

"நீ எப்போதும் அவள் பக்கம்தான் பேசுவாய் என்று எனக்குத் தெரியும்."

"நான் பொதுப்படையாகக் கடவுளை நடுவில் வைத்துப் பேசுகிறேன். உன்னாலோ அவளாலோ எனக்கு ஏதாவது காரியம் ஆக வேண்டுமா?"

இடித்த எள்ளுருண்டைகளுள் ஒன்றை ஸந்தியிடம் கொடுத்து விட்டுக் கேட்டாள் பாணு: "எல்லாம் சரியாக அமைந்திருக்கிறதா அம்மா?"

"நானென்ன சிறுபிள்ளையா பாணு, என்னிடம் கொடுக்கிறாயே," அதை விண்டு வாயிலிட்டுக் கொண்டே கேட்டாள் ஸந்தி.

"ஸந்தி அம்மா! ஓ ஸந்தி அம்மா!" யாரோ குரல் கொடுத்தார்கள்.

"தயாளுவின் குரல் போல் இருக்கிறதே. இதோ வருகிறேன் மகளே" மிகுந்த எள்ளுருண்டையை வாயிலிட்டுக் கொண்டு புறங்கையால் துடைத்தவாறே புறப்பட்டாள் ஸந்தி.

"வணங்குகிறேன் அம்மா. எங்கே போய்விட்டீர்கள். எத்தனை நேரமாக உங்களைத் தேடிக் கொண்டிருக்கிறேன் தெரியுமா?"

"தீர்க்காயுசு மகளே! கடவுள் உனக்கு எல்லா நலன்களையும் ஒரு குறைவின்றிக் கொடுக்கட்டும். காலில் முள் தைத்துவிட்டது. அதை எடுப்பதற்காக பாணுவின் வீட்டிற்குப் போயிருந்தேன். கூடவே நாராயணனுக்கும் கொஞ்சம் புத்தி சொல்ல வேண்டுமென்று தோன்றியது. இது கௌரவப்பட்டவர்கள் வாழ்கிற வீதி. எல்லோர் வீட்டிலும் வயதுவந்த பெண்கள் இருக்கிறார்கள். சோதாப் பயல்களையெல்லாம் வீட்டிற்குக் கூட்டி வராதே என்று சொல்லிவிட்டு வந்தேன்."

"அம்மா உங்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை. எல்லோரையும் உங்களைப்போல நல்லவர்களாக நினைக்கிறீர்கள். அவர்கள் நாராயணனை வேண்டி வரவில்லை. யாருக்காக வருகிறார்கள் என்று எங்களுக்குத்தான் தெரியும்."

"மகளே தயாளு! எல்லாம் இறைவனுக்குத்தான் வெளிச்சம். பாலுவைப்' பார்த்தால் அப்படிப்பட்ட பெண்ணாகத் தெரியவில்லை."

"வித்தியாசமாகத் தெரிய வேண்டுமென்றால் அவளுக்கென்ன இறக்கை முளைத்திருக்குமோ? பிறந்தவீடு, புகுந்தவீடு இரண்டையும் துறந்துவிட்டுக் கோயில்மாடு மாதிரி திரிகிறவளை நல்லவள் என்று சொல்ல முடியுமா?"

"மகளே, வாய்கூசாமல் அப்படிப் பேசாதே. என்னென்னவோ காரணங்களினால், பலருக்குத் தீமிதி வாழ்க்கை அமைந்துவிடுகிறது."

"இல்லை அம்மா, உங்களுக்கு விஷயம் தெரியாது. அவளுடைய குணம், குறி எதுவுமே நேரில்லை. எங்கேயெல்லாம் பஜனை, பக்திக் கூட்டங்கள் சேர்கின்றனவோ அங்கே, பெரிய பக்திமான் மாதிரித் துள்ளிக்கொண்டு ஓடுகிறாள். படிப்பது இராமாயணம், இடிப்பது பெருமாள் கோவில்."

"அடி தயாளு, நம் வாயால் ஏன் கெட்டதைப் பரப்பணும். பிறருடைய பாவத்தை ஏன் சுமக்கணும். எல்லாம் கடவுளின் பார்வைக்கே விட்டுவிடுவோம். இந்தக் குர்த்தா வெகு அழகாக இருக்கிறதே, தயாளு புதிதாகத் தைத்ததா?"

"இல்லை அம்மா. பிள்ளை பிறந்தபோது எங்கள் வீட்டில் கொடுத்தார்கள். இங்கே வந்த பிறகு எனக்கு ஒரு திருகாணிகூடச் செய்தது கிடையாது."

"ஆமாம் மகளே, குடும்ப பாரம் அந்த அளவுக்கு நம்மை அலைக்கிறது."

"என் விஷயம் என்று வரும்போதுதான் இந்தப் பற்றாக்குறையெல்லாம். அவருடைய தங்கை வந்துவிட்டால் உடனடியாகக் கடையிலிருந்து துணிமணிகள் வந்துவிடும்."

"அதுவும் முக்கியமான சம்பிரதாயம் மகளே! இல்லையானால் பிறந்த வீட்டிலிருந்து ஒன்றும் கொண்டு வரவில்லை என்று, புகுந்த வீட்டில் ஏளனம் செய்வார்கள்."

"வெயிலில் வைத்திருந்த தயிர்ப் பாத்திரத்திலிருந்து சிறிது வெண்ணெய்க் கசிவை எடுத்து, கைகளில் தடவி, அழுக்கை உருட்டியவாறே கேட்டாள் தயாளு: "உங்கள் பாலு எப்படி இருக்கிறாள்?"

"சுகமாகத்தானிருக்கிறாள். சாதுப்பெண் பாவம்!"

"ஒரு சாதுவுமில்லையம்மா. இப்படிச் சபலபுத்தியுடைய பெண் ஒருத்தி எங்கள் ஊரிலேயும் இருந்தாள். தினமும் அதிகாலையிலேயே குருத்வாராவுக்குப் போய், பஜனையில் கலந்து கொள்ளுவாளாம். சிறுகச் சிறுகக் குருத்வாராவின் பூசாரியுடன் அவளுக்குத் தொடர்பு ஏற்பட்டுவிட்டது. பிறந்தவீடு, புகுந்தவீடு இரண்டிலும் மண்ணைத்தூவி விட்டு அவள் அந்தப் பூசாரியுடன் ஓடிப்போகத் துணிந்துவிட்டாள். எப்படியோ கணவன் வீட்டாருக்கு விஷயம் தெரிந்து அவர்களை, கையும் களவுமாக ஸ்டேஷனிலேயே பிடித்து விட்டார்கள். பூசாரியின் முகத்தில் கரிபூசி, செருப்பு மாலை மாட்டிக் கழுதையின் மேல் ஏற்றி ஊர்வலம் விட்டார்களாம். பெண்ணின் தகப்பனுரை விளித்து அவளை அவரிடம் ஒப்படைத்து, 'இனி இவளைக் குளம், கிணறு எதிலாவது முழுகிச் சாகச்சொல்லு எங்கள் குடும்பத்திற்கு வேண்டாம்' என்று சொன்னுர்களாம்."

"உட்காரு தயாளு, தேனீர் குடிக்கிருயா?

"அதெல்லாம் ஒன்றும் வேண்டாம், அம்மா. நான் முக்கியமான ஒரு காரியமாக உங்களிடம் வந்தேன்."

"சொல்லு மகளே! என் வீட்டில் இருக்குமாணுல் கொடுக்க ஒரு தடையுமில்லை."

"மகனுக்குக் காலில் அடிபட்டு விட்டது அம்மா. கட்டுப் போடுவதற்குக் கொஞ்சம் சாராயம் வேண்டும்."

"எங்கள் வீட்டில் சாராயம் ஏதம்மா. நாங்கள் எவருமே அதைத் தொடுவதில்லை. கொஞ்சம் இரு. நாராயணன் வீட்டிலிருக்கும்."

"முன்பு மாப்பிள்ளை வந்தபோது, சாராயம் வாங்கி இருப்பீர்களே, அதில் ஏதாவது பாட்டிலில் மிச்சம் இருக்குமோ என்று கேட்க வந்தேன்."

"அப்போது வாங்கியது உண்மைதான். எல்லாவற்றையும் அவர்கள் குடித்துத் தீர்த்துவிட்டார்கள். அந்த சாதுவின் மகள் காலிப்புட்டிகளைக் கூட வாங்கிக்கொண்டு போய்விட்டாள். எங்கள் பாபாவைத்தான் உனக்குத் தெரியுமே, அவரால் எவருக்கும் இல்லை என்று சொல்ல முடியாது. அந்தப் பெண் வந்து மண்ணெண்ணெய் வாங்க வேண்டுமென்று கேட்டதும் தூக்கிக் கொடுத்துவிட்டார். வீட்டிலேயே வேலைக்கு உதவும் என்று அவரிடம் சொல்லத்தான் செய்தேன். அவர் கேட்டால்தானே. ஒவ்வொரு வெள்ளைப் பாட்டிலும் இருபது பைசாவுக்கு விலை போகிறது. நீ பானுவைக் கேட்டுப்பார்."

"எனக்கு அவளிடம் முகம் கொடுத்துப் பேச விருப்பமில்லை. நான் நேற்று என் மைத்துனரைக்கூட கோபித்துக் கொண்டேன். ஜாகர் ஏன் அவள் வீட்டிற்குப் போக வேண்டும்."

"தயாளு, உன் மைத்துனருக்குக் கல்யாணம் செய்து வைத்துவிடு. எத்தனை நாளைக்கு அவன் உன் கைச்சாப்பாட்டை சாப்பிட்டுக் கொண்டிருப்பான்?"

"ஏதாவது நல்ல சம்பந்தம் வரவேண்டாமா? தரக்குறைவானவர்களின் தொடர்பெல்லாம் எனக்குப் பிடிக்காது. காசாசை பிடித்து மைத்துனனுக்குக் கல்யாணம் செய்ய மாட்டேன் என்கிறாள், என்று ஊரிலுள்ளவர்கள் பேசுவார்கள். நான் பலமுறை அவரிடம் சொல்லியும் விட்டேன். எல்லோரும் என் மண்டையைத் தானே போட்டு உருட்டுவார்கள். ஏதாவது நல்ல பெண்ணைப்பார் என்று சொன்னேன்."

"ஓரகத்தி என்று ஒருத்தி வந்தால், உனக்கு உதவியாகத் தானிருக்கும். தனியாக உன்பாடு சங்கடம்தான்."

"எனக்கு உதவியை விடுங்கள் அம்மா. குடும்பம் நல்ல முறையில் வளரும். அதுதானே முக்கியம்?"

யாரோ வருவதைப் பார்த்து, நெற்றியில் கையை வைத்துத் தொலைவில் வருபவரை அடையாளம் கண்டு கொண்டாள் ஸந்தி. "உன் மைத்துனர்தான் போலிருக்கிறது."

"ஆமாம்! அவனேதான். பாரோவின் வீட்டிற்குத்தான் வந்திருப்பான். நேற்று அவ்வளவு படித்துப்படித்துச் சொன்னேன்."

அவன் தற்போது நெருங்கி அருகிலேயே வந்துவிட்டான்.

"எதற்காக இப்படி முகத்தைத் தூக்கிக்கொண்டு வருகிறீர் ஜாகர்", இழுத்தாற்போல் கேட்டாள் தயாளு.

"நான் உன்னைத் தேடிக் கொண்டுதான் வந்தேன் அண்ணி. குழந்தை வலியால் துடித்துக் கொண்டிருக்கிறான். உன்னையோ காணோம்."

"எங்கேயாவது ஒருதுளி சாராயம் கிடைத்தால் வந்திருப்பேன்."

"நான் நாராயணன் வீட்டிலிருந்து வாங்கி வருகிறேன்."

"ஆமாம், உனக்கு நாராயணன் வீட்டைத்தவிர வேறு எங்கேயும் சாராயம் கிடைக்காதே."

"நீங்கள் போங்கள் அண்ணி, நான் நொடியில் வந்து விடுகிறேன்." அவன் நாராயணன் வீட்டுப்பக்கம் நடந்தான்.

"அந்தப் பெண் போடுகிற சொக்குபொடியைப் பார்த்தீர்களா அம்மா. எப்போதும் என் மைத்துனனுக்கு அவள் ஸ்மரணைதான்."

"இப்படிக் காற்றைக் கயிருகத் திரிக்காதே தயாளு. உன் மைத்துனனுக்குத்தான் நாராயணனேடு எவ்வளவோ ஆண்டு களாகத் தொடர்பு உண்டே!"

"உங்களுக்கு ஒன்றுமே புரியவில்லே. அந்த நாராயணன் வெறும் சப்பாணி. அவள் நடக்கும்போதே கண்ணுல் ஜாடை பரிமாறி விட்டுப் போய்விடுவாள். அவள் எங்கள் கிணற்று வழியாகவும் போகிருளாம். கொஞ்சம் பொறுங்கள். அவளே அழ அழ வைத்து விடுகிறேன்."

"குழந்தாய் தயாளு, கண்ணுல் பார்க்காமல், யாரையும், ஒன்றும் சொல்லக்கூடாது. இப்போதெல்லாம் நெருப்பை ஊதி விடுகிற வர்கள் பலபேர்."

இன்னும் வீட்டிற்குப் போகவில்லேயா அண்ணி, குழந்தை அழுது கொண்டிருப்பான் புறப்படு. நான் சாராயம் வாங்கி வந்து விட்டேன்." நடந்துகொண்டே கையில் மறைத்து வைத்திருந்த சாராயக் கிண்ணத்தை அவளிடம் காட்டினுன் ஜாகர்.

தயாளுவும் மைத்துனனுடன் வீட்டிற்கு நடந்தாள்.

"நீ செய்வது கொஞ்சம்கூட நன்ருக இல்லே." ஜாகர் சந்தில் நடக்கும்போது அவளிடம் கூறிவிட்டுத் தன் கூரான பார்வையை அவன்மேல் செலுத்தினுன். "ஒன்றுமில்லாததற்கெல்லாம் நீ அடம் பிடிக்கிருய் அண்ணி. அவள் என்ன உன்னேவிட ரூபவதியா?" நமட்டுச் சிரிப்புடன் கேட்டான் அவன்.

"எனக்கு எல்லாம் தெரியும்." குர்த்தாவின் பித்தானேப் பொருத்தியவாறு அவள் பேசினுள். "அண்ணியின் புது மெருகு தேய்ந்து விட்டதல்லவா?"

"நீ எனக்கு எப்போதுமே புதியவளாகத்தான் காட்சி அளிக்கிருய். உன்னிடம் ஒரே ஒரு குறை. எப்போது பார்த்தாலும் சண்டை போட்டுக் கொண்டே இருக்கிறாய்."

உன்னே இப்படித் தெருவில் அலேயவிட்டு விட முடியுமா? அதனுல்தான் சண்டை போடுகிறேன். பெண்ணுக்கு எதிரி பெண்ணேதான். எப்படித்தான் இந்த மாதிரித் தொடர்பெல்லாம் ஏற்படுகிறதோ. நீ எப்போதும் அங்கேதான் சுற்றுகிருய்"

"அண்ணி, பாஞே அந்த மாதிரிப் பெண்ணில்லே."

"எனக்கு எல்லாம் தெரியும் ஜாகர். பாஞேவின் புகழை ஏன் நீ பாட மாட்டாய்? அவள் பெரிய துயரத்தில் ஆழ்ந்து கிடக்கிருளோ? எவ்வளவு குடியைக் கெடுத்தாளோ, இன்னும்

கெடுக்கப் போகிறுளோ, இன்றைக்கு உன் அண்ணனிடமே குட்டை அவிழ்த்து விடுகிறேன்."

"அண்ணனிடம் என்ன சொல்லிவிடுவாய்?" கடுமையான குரலில் அவன் கேட்டான்.

"நாராயணன் வீட்டில் நீ பழியாய் கிடக்கும் விவரத்தைத்தான்."

"என் அண்ணிக்கு எதனுல் எரிச்சல் ஏற்படுகிறது என்ற காரணத்தையும், அண்ணனிடம் நான் சொல்லிவிடுகிறேன்."

"நாளைக்கு வரப்போகிறுளே, அவளை எண்ணி எரிச்சல் படுகிறேன். குடும்ப கௌரவத்தைப்பற்றி உனக்கு ஒரு கவலையுமில்லை. ஆனுல் எனக்கு இருக்கிறதே! சின்னக் குழந்தையாக இருந்தால், முதுகில் இரண்டு அறை வைத்துத் திருத்துவேன். நீ வளர்ந்த பிள்ளையாகி விட்டாயே."

அன்று மாலை, அக்குளிரில் சாராயப் புட்டியை இடுக்கிக் கொண்டு, மெல்ல மெல்ல நாராயணன் வீட்டின் பக்கம் நடந்த போது தனக்குத்தானே ஜாகர் சொல்லிக் கொண்டான். ஒரு வேளை அண்ணி, சரியாகத்தான் சொல்லுகிறுளோ? இல்லை; நாராயணன், என் பழைய நண்பன், பானு என்னுடைய அண்ணிக்குச் சமானம்.

நாராயணனின் வீட்டுக் கதவை மெல்லத் தட்டினுன்.

ரொட்டி சுட்டுக் கொண்டிருந்த பானு எழுந்திருந்து கதவைத் திறந்தாள். அவன் பேச முயற்சிக்கு முன்பே அவள் கூறினுள்: "உன் அண்ணன் வீட்டில் இல்லை."

"நான் மொட்டை மாடியில் உட்காருகிறேன். அண்ணன் வந்ததும் அங்கே அனுப்பிவை." படியேறிமேலே போய்விட்டான்.

சிறிது நேரம் கழித்துக் கீழே இறங்கி வந்தான். "ஒரு செம்பில் நீரும், குவளையும் கொடு அண்ணி."

"உன் அண்ணன் வந்த பிறகே நீ இங்கு வரலாம்." என்றவாறு அவள் படீரென்று கதவை மூடிக் கொண்டாள்.

கதவைத் தள்ளிக்கொண்டு உள்ளே நுழைந்தான் ஜாகர். "எனக்கும் நாராயணனுக்கும் உள்ள உறவு உனக்குத் தெரியாது அண்ணி. அவர் என்னை மடியில் உட்கார வைத்துச் சோறு ஊட்டியிருக்கிறுர். அவர் எனக்குச் சித்தப்பா முறையாக வேண்டும். தமையன் என்றே அழைக்கிறேன். உண்மையில் அவர் எனக்குச் சிறந்த நண்பர் ஆவார்.

ஒரு செம்பில் நீரும், காலிக் குவளையும் கொண்டு அவனருகில் வைத்துவிட்டுப் பேசினுள் பானு:

"உன் அண்ணன் வீட்டிலில்லே பார். அதனுல்தான் சொல்லுகிறேன்."

அவன் ஒன்றும் பதில் சொல்லாமல், சில நிமிஷங்கள் அங்கேயே உட்கார்ந்திருந்தான். அவளுடன் பேசுவதற்கு முயற்சி செய்தான் . கீழே பார்த்தவாறு பானே ரொட்டியை வாட்டினுள். அவன் தண்ணீரை எடுத்துக் கொண்டு மாடிப்படி ஏறினுன். சிறிது நேரம் தனியே உட்கார்ந்து சாராயம் குடித்தான். பானு ரொட்டி செய்து முடித்ததும், அவன் மீண்டும் கீழே இறங்கி வந்தான். பானே ரொட்டியின் சூடு ஆறுவதற்காக அவற்றைப் பரப்பி வைத்தாள்.

நெய்யை எடுத்து ஒவ்வொன்றிலும் தடவினுள்.

உள்ளேயிருந்த மனேயில் வந்து அவன் உட்கார்ந்து கொண்டான். "என்மேல் உனக்குக் கோபமா அண்ணி?"

சாராய நெடி பானேவை மூச்சுமுட்ட வைத்தது. ஒரு நிமிஷம் அவனே ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு தலையைக் குனிந்துகொண்டு அடுக்களே வேலேயில் மும்முரமாக ஈடுபட்டாள்.

"சின்ன மைத்துனனிடம் கொஞ்சம் சிரித்துப் பேசிவிட்டால் ஒன்றும் குறைந்து போகாது அண்ணி. ஒவ்வொரு பெண்கள் என்னவெல்லாமோ உபசாரம் செய்கிருர்கள்!"

ஒரு நிமிஷம் அவனேக் கடுமையுடன் நோக்கினுள் பானே. "கொஞ்சம் மாடியிலேயேபோய் உட்காரும்."

அவன் காலேப் பரப்பிக்கொண்டு அழுத்தமாக உட்கார்ந்தான். "நான் சொல்லுவதைக் கேட்கும்வரை இங்கிருந்து நகரமாட்டேன்."

"இதெல்லாம் நல்லதில்லே ஐயா," பானே கடுமையுடன் கூறினுள்.

"என்னுடைய தோலேச் செருப்பாக வேண்டுமானுலும் தைத்துப் போடுகிறேன். ஆனுல் அண்ணி, இந்த மாதிரிக் கொடூரமாகப் பார்க்காதே."

பானே பதில் ஏதும் கூறவில்லே.

"உன் முகத்தைக் காண வேண்டுமென்று தவித்துப் போகிறேன். நாள் முழுவதும் உன்னேயே நினேத்துக் கொண்டிருக்கிறேன்."

"என் முகத்தில் பூ மலர்ந்திருக்கிறதா?" ரொட்டியைத் துணியில் பொதிந்து, டப்பாவினுள் வைத்து மூடினுள் பானே.

"அதுதான் எனக்குப் புரியவில்லே. வீட்டிற்குப் போனுலும் என்னேக் கண்டபடி ஏசுகிருர்கள். இங்கே வந்தாலும் நீ என்னே வெறுக்கிருய். என் மனம் ஒரு நிலேயில் இல்லாமல் தவிக்கிறது. திரும்பத்திரும்ப இங்கேயே வர விழைகிறது."

மாவு பிசையும் தாலத்தில் ஒட்டியிருந்த கோதுமைப் பிசுக்கை எல்லாம், கரண்டியினுல் சுரண்டத் தொடங்கிஞள் பாஞே.

"அண்ணி, சரவணனும் என்னுடைய தோழன்தான். ஒரு திருவிழாவில் நாங்கள் குஸ்திகூடச் செய்து காட்டிஞேம்."

பாஞேவின் கோபம் மறைந்து போயிற்று. அவள் நெடுமூச் செறிந்தாள். சற்று அனுதாபத்துடன் அவனை நோக்க முயன்ற போது அவளுடைய கரம் அவனுடைய கைப்பிடியிலிருந்தது.

"இப்படி நீ செய்யாதே"-அவள் அருவருப்புடன் கூறிஞள்.

"நீ எனக்கு என்ன தண்டனை வேண்டுமாஞலும் கொடு." அவன் அவளுடைய கையை இறுகப் பற்றிக்கொண்டான். "இந்த நாராயணனை ஒரு மனிதஞக மதித்து, அவனுக்காக என்னை மறுதளிக்கிருயே. இரண்டு மாதமாக உன்னைப் பார்த்ததிலிருந்தே. என் மனம் வசத்திலில்லை."

அவள் திமிறிஞள். "நான் கூச்சல் போடுவேன். நீ இங்கிருந்து போய்விடு."

"நான் எங்கே போவேன் பாஞே."

முளையில் கட்டியிருந்த எருமை தலையை ஆட்டிற்று. கட்டுச் சங்கிலியின் ஒலி கேட்டதும், நாராயணன் வந்துவிட்டதாக அவன் அனுமானித்தான். பிடியைத் தளர்த்தி விலகிக்கொண்டான். தீச்சுவாலையைப் போல் வெளியே பாய்ந்தாள் பாஞே. வீட்டைத் திறந்து போட்டுவிட்டு, நெஞ்சு பதைக்க அவள் ஸந்தியின் வீட்டிற்குள் நுழைந்தாள்.

"யார் இது? பாஞேவா?" ஸந்தி வாசற்படியில் அமர்ந்து, நாய்க்கு ரொட்டித் துண்டை வீசிக்கொண்டிருந்தாள். "இப்படி ஏன் ஓடி வருகிருய் மகளே?" அவள் கேட்டாள்.

"நானேதான் அம்மா". அவள் ஸந்தியிடம் சென்று நின்று விம்மத் துவங்கிஞள்.

ஸந்தி அவளுடைய தலையில் கையை வைத்துக் கேட்டாள். "என்ன ஆயிற்று மகளே? நாராயணன் ஏதாவது சொன்ஞஞே!"

"அவர் வீட்டிலில்லை. அந்த தயாளுவின் மைத்துனன், அவன் அவன்" தொடர்ந்த சொற்கள் விம்மலில் மறைந்தன.

"அந்தப் பயலுக்கு இவ்வளவு திமிரா? இதோ அவன் தாடியைப் பற்றி இழுக்கிறேன் பார்." கதவு மூலையில் சார்த்தியிருந்த கரும்புகளில் ஒன்றை எடுத்துக் கொண்டு அவள் புறப்பட்டாள்.

"வேண்டாம் அம்மா, ஊரார் என்ன சொல்வார்கள்!" அவள் ஸந்தியைத் தடுத்து நிறுத்திஞள்.

"விடு என்னை. அந்த அயோக்கியனுக்கு இந்த நேரத்தில் நம் வீதியில் என்ன வேலை? யார் என்ன சொன்னாலும் பரவாயில்லை. அவன் இன்னோர் இடத்திலும் இதே மாதிரி செய்வான். இதற்கு ஒரு முடிவு காண வேண்டும். இரைந்து கொண்டே போனாள் ஸந்தி.

ஜாகர் உடனடியாகவே வீட்டைவிட்டு ஓடிவிட்டான். ஸந்தி எதிர்ப்பட்டவர்களிடமெல்லாம் முறையிட்டுக் கொண்டே போனாள்: "தயாளுவின் மைத்துனன் எப்பேர்பட்ட ஆள் என்று பார்த்தாயா? குடித்துவிட்டு நாராயணனின் வீட்டிற்குள் நுழைந்திருக்கிறான்."

"உங்களுக்கு முழு விவரமும் தெரியாது அம்மா"- வசனி பேசத் துவங்கினாள். இந்தமாதிரிப் பெண்கள், தானே அவர்களை அழைப்பார்கள். யாராவது சிக்கிக் கொண்டால் கூச்சல் போட்டு ஊரைக் கூட்டி நடிப்பார்கள்."

"இல்லை மகளே, பானு அப்படி இல்லை. நானும்தான் அவள் வந்ததிலிருந்து பார்க்கிறேன். இந்த மாதிரிக் குணமே அவளிடம் கிடையாது."

"விஷயம் தெரியுமா அம்மா, அவன் இவளுக்காக நல்ல துணிமணி எல்லாம் வாங்கிக் கொடுத்திருக்கிறான். அதெல்லாம் சும்மா தருவார்களா?"

"இல்லை மகளே, அதை வாங்கியது நாராயணன்தான். அவன் எங்கோ அவசரமாகப் போகவேண்டி இருந்ததால், ஜாகரிடம் கொடுத்து அனுப்பி இருக்கிறான்."

"நீ அங்கே உட்கார்ந்திருக்கும்போது, அவன் வேறு எப்படிச் சொல்லுவான். நாராயணன் கொடுத்து அனுப்பியதாகத்தானே கூறமுடியும்!"

"எது உண்மை என்று ஆண்டவனுக்குதான் தெரியும்." நிலைப்படியின்மேல் நின்ற நாயின் மேல் கையிலிருந்த கரும்பை வீசினாள். அது வீல்வீல் என்று ஊளையிட்டவாறே ஓடிற்று.

"இன்றைக்கு தோட்டத்துக் கிணற்றுமேட்டுக்கே போவோம்." சாராயப் புட்டிகளைப் போர்வையின் மடிப்புக்களில் மறைத்தவாறே தன் இரு நண்பர்களிடமும் கூறினான் நாராயணன்.

"ஏன், வீட்டிற்குப் போக வேண்டாமா?" பந்தா வினவினான்.

"வீட்டிலே குடித்தால் பானு சண்டைபோடுகிறாள்".

"நீ எங்கே இருந்தோ ஒரு பார்ப்பனப் பெண்ணை வீட்டில் கொண்டுவந்து வைத்திருக்கிறாய். அவள் சாப்பாட்டு

விஷயத்திலெல்லாம் புகுந்து இடையூறு செய்கிருள்". உடம்பை நெட்டி முறித்தவாறே பேசினன் பந்தா.

"பானே ரொம்ப நல்ல மாதிரி பந்தா." லாபேயின் மகன் இந்தர், நாராயணனைப் பார்த்தவாறே கூறினன்.

"இந்த உலகத்தில் நாம் வாழப்போவது வெகு சில நாட்கள். நாலு நண்பர்களுடன் சேர்ந்து உட்கார்ந்து, உண்டு குடித்து மகிழ்வதுதான் வாழ்க்கை. அதை ஒருவர் தடைசெய்தால், அவர்களை நல்லவர்கள் என்று எப்படிச் சொல்ல முடியும்?" பொன்மொழியை உதிர்த்தான் பந்தா.

"வா, உங்கள் வீட்டு மாடியில் உட்கார்ந்து கொள்ளலாம் இன்றைக்கு." நாராயணன் கூறினன்.

"ஏன், என்னை வீட்டைவிட்டு விரட்டிவிட யோசனையா? என் அப்பாவின் தடியைப் பார்த்திருக்கிருய் அல்லவா?"

"இது பெரிய தொந்தரவு நாராயண். நண்பர்கள் குலாவுவது இனி தடைபட்டுப் போகும்." - லாபேயின் மகன் இந்தர் கூறினன்.

"தோழனே, இப்போதிலிருந்தே நீ பானேவிடம் இவ்வளவு பயப்படத் தொடங்கிவிட்டாய்." பந்தா மீண்டும் நாராயணனைச் சீண்டினன்.

யோசனையில் ஆழ்ந்தவனுகப் பேசினன் நாராயணன் : "முதல் காரியமாகப் பொருள் நஷ்டம்; உடம்புவேறு கெட்டுப் போகிறது. பானே சொல்வதிலும் நியாயம் இருக்கவே செய்கிறது."

"இந்தப் பொய் வேதாந்தமெல்லாம் கிடக்கட்டும் அண்ணே. உனக்கென்ன, பிள்ளையா? குட்டியா? யாருக்காக நீ பணம் சேர்த்து வைக்க வேண்டும்? உடம்பு இனிமேலா கெடப்போகிறது? இன்னும் கொஞ்ச நாட்கள்தான், அதுவரை ஆனந்தமாகப் பொழுதைக் கழிப்பதை விட்டு ஏதேதோ பேசுகிருயே." இந்தர் நாராயணனுக்கு உபதேசம் செய்தான்.

"ஆனுல், பானே.... அவளுக்கு இன்னும் ஒன்றும் வயதாகி விடவில்லை." யாரையோ பார்த்துப் பேசினன் நாராயணன். எல்லோரும் கிணற்றடிக்குப்போய்ச் சேர்ந்தார்கள். மூன்று பேருமாகச் சேர்ந்து, அந்தத் துரவிலிருந்து நீர் சேந்தி அதன் மேட்டிலேயே உட்கார்ந்து, புட்டிகளைக் காலி செய்தார்கள். தடுமாற்றமான பேச்சு தொடர்ந்தது.

பழைய கதை ஒன்று நாராயணனுக்கு நினைவு வந்தது. நம்மைப் போலவே ஒரு போதை ஆசாமி கிணற்றங்கரையில் உட்கார்ந்து குடிக்கத் தொடங்கினராம். இடையிலே அங்கு கடும் வெயிலடிக்கத்

தொடங்கிவிட்டதாம். அடாடா, வெயில் வந்துவிட்டதே என்று அங்காலாய்த்தாராம்...

"வா,வா, கிணற்றை எங்காவது நிழலுக்குக் கொண்டு போகலாம்! ஒரு நண்பர் யோசனை சொன்னாராம். "உண்மைதான், இது நல்ல யோசனைதான் என்று மற்றவர் இதை ஆமோதித்தாராம்.

கயிற்றைக் கட்டிக் கிணற்றை வேறு இடத்திற்கு இழுக்கத் தொடங்கினார்களாம். இழுத்து, இழுத்து நாள் முழுவதும் அதே பணியில் ஈடுபட்டார்களாம். மாலையில் சூரியன் மறைந்து நிழல் வந்து விட்டதாம்.

"போதும், இனிமேல் வேண்டாம்; கிணற்றை நிழலுக்குக் கொண்டு வந்து விட்டோம்" ஒரு நண்பர் கூறினார்.

"தாங்கள் உட்கார்ந்திருந்த கிணற்று மேடு, நிழலுக்கு வந்து விட்டது, குறித்து அவர்களுக்குப் பெரு மகிழ்ச்சி." நாராயண் பேசி முடித்தான். மற்ற மூவரும் புட்டியில் மிஞ்சியிருந்த சாராயத்தைக் குடித்து முடித்தார்கள். யாரோ அந்த கிணற்றின் பக்கம் வரத் தொடங்கினர். மூவருமே அந்தத் திசையைப் பார்த்தார்கள்.

"யார் அது!" அவன் அருகில் வந்தபிறகு நாராயணன் வினவினான்.

"நான்தான். நீங்கள் எல்லாம் இங்கே வந்துவிட்டீர்கள். நான் உங்களைத் தேடிக்கொண்டு வீட்டிற்குப் போயிருந்தேன்." ஜாகர் கூறினான்.

"நீ ரொம்பத் தாமதித்து வருகிறாய். நாங்களெல்லோரும் புட்டிகளைக் காலி செய்து விட்டோம்." நாராயணன் கூறினான்.

"அதைப்பற்றிக் கவலை இல்லை. நான் முக்கியமாக ஒரு விவரம் உன்னிடம் பேசவேண்டும்."

"சொல்லேன்."

"தனியாகப் பேசலாம்!"

"பானுவை எவனாவது கிளப்பிக் கொண்டு போய்விட்டானா? தனிமையில் பேச வேறு என்ன விஷயம் இருக்கிறது?" பந்தா வேடிக்கையாகக் கேட்டான்.

"சற்று நேரத்தில் வருகிறேன்" என்று கூறிவிட்டு, ஜாகருடன் கிராமப்புறத்துச் சாலைவழியாக நடக்கத் தொடங்கினான் நாராயணன். இருவரும் சிறிது தொலைவு ஒன்றும் பேசாமலே நடந்தார்கள்.

"என்ன சமாசாரம் ஜாகர்," நாராயணன் கேட்டான்.

"என்னத்தைச் சொல்லுவேன் அண்ணு. உன்னுடைய புதிய மனைவி ஒரு..."

நாராயணன் காலடியிலிருந்து நிலம் நழுவுவதுபோல் தோன்றிற்று.

"என்ன ஆயிற்று தம்பி" அவன் தளர்ச்சியுடன் வினவினன்.

"கொஞ்சம் புதுச்சரக்கு கிடைத்தது. நீ வீட்டிலேயே இருப்பாய், உன்னுடன் உட்கார்ந்து இரண்டு மிடறு குடிக்கலாம் என்று வீட்டிற்கு வந்தேன்...."

"வீட்டில் நண்பர்களை அழைத்துக் குடித்தால், பானு முகத்தை தூக்கிக் கொள்ளுகிறளே என்று நான் கிணற்றடிக்கு வந்தேன்."

"உன்னிடம் எப்படிச் சொல்லுவேன் அண்ணே. நீயோ வீட்டில் இல்லை. என்னை சாப்பிட்டு விட்டுப் போ என்று வற்புறுத்தினள். நான், 'அண்ணன் வந்த பிறகு சாப்பிடுகிறேன்' என்று சொன்னேன்...

"பார்க்கப் போனல், மிகவும் நல்ல சுபாவம் அவளுடையது."

"நீதான் மெச்சிக் கொள்ள வேண்டும். உனக்குச் சூதுவாதே தெரியாது. உன்னிடம் இஃதயெல்லாம் தெரிவிக்க வேண்டாம் என்றுதான் இருந்தேன். பிறகு எனக்கு உள்ளூரப் பயம். அவள் உன்னிடம் என்ன கோள் மூட்டுவாளோ? நமக்குள்ளே பேதம் ஏற்படலாம். இந்த மாதிரிப் பெண்களிடம் உனக்கு என்ன நம்பிக்கை?" அவசர அவசரமாகக் கிராமத்தை நோக்கி நடந்து கொண்டிருந்த நாராயணனிடம் பேசினன் ஜாகர்.

நாராயணன் எதையும் காது கொடுத்துக் கேட்கவில்லை. "உன்னிடம் சாராயம் ஏதாவது மிச்சம் இருக்கிறதா?" என அவன் கேட்டான். தன் குடுவையிலிருந்ததை எல்லாம் அவனிடம் கொடுத்தான் ஜாகர். "இன்று மாலை அண்ணி செய்த காரியத்தினல் என் போதை போன இடம் தெரியவில்லை. இதை இன்னெரு இடத்திலிருந்து வாங்கி வந்தேன்."

ஒரே வாயில் அவ்வளவு சாராயத்தையும் விழுங்கிவிட்டு காலிப் புட்டியை விசிறினன் நாராயணன்.

"இதைப்பற்றி யாரிடமும் பேசாதே நாராயண். உன்பேர்தான் கெடும்." தன்னுடைய வீட்டுப் பக்கம் திரும்பியபோது தணிந்த குரலில் அவனிடம் கூறிவிட்டு நடந்தான், ஜாகர்.

முழுப் போதையுடன் வீட்டை அடைந்தான் நாராயணன். உள்ளே நுழைந்ததும் கதவைத் தாழிட்டுக் கொண்டான். பானு பாலை அடுப்பில் வைத்துச் சூடேற்றிக் கொண்டிருந்தாள்.

"கோபித்துக் கொள்ளாதே பானே, குடும்பங்களில் இப்படி நிகழ்வது சகஜம். ஒரு வேளை அவன்தான் இப்படித் திரித்துப் பேசுகிறானோ", ஏதேதோ பேசி உளறிக்கொட்டினான் நாராயணன்.

"நீங்கள் போய் தூங்குங்கள்", அவன் கையை விலக்கினாள் பானோ. அவள் தன் கட்டிலில் சென்று படுத்தாள். ஆனால் வெகு நேரம் வரை அவளுக்கு உறக்கமே பிடிக்கவில்லை. புரண்டு படுக்கும் போதெல்லாம் பானோ வேதனையினால் முனகினாள்.

நாராயணனுக்கு மனது கேட்கவில்லை. எழுந்திருந்து அடுப்பை மூட்டிப் பாலைச் சூடுசெய்து, அதில் சிறிது நெய்யை வார்த்து அவளிடம் கொடுத்தான்.

"வேண்டாம், எனக்குச் சாப்பிட விருப்பம் இல்லை."- முகத்தை மறுபக்கம் திருப்பியவாறே கூறினாள் பானோ.

"விருப்பமில்லா விட்டாலும் நான் சொல்லுவதற்காகவாவது குடி" அவன் வற்புறுத்தினான். பானோ பதில் ஏதும் கூறவில்லை. பாலையும் வாங்கிக் கொள்ளவில்லை.

"நான் உன் காலைத்தொட்டுக் கெஞ்சுகிறேன் பானோ. தயை செய்து எனக்காகப் பாலைக்குடி." அவன் அவளுடைய காலைத் தொட முயன்றான்.

பானோ எழுந்திருந்து தம்ளரை வாங்கிக் கொண்டாள். ஒரு துளி வாயில் விட்டுக் கொண்டு பார்த்தாள். பால் உள்ளே செல்லவே மறுத்தது. அழுகை பொங்கிக் கொண்டு வந்தது. பெரிதாக அழத் தொடங்கினாள். நாராயணன் அவளுடைய கழுத்தைக் கட்டிக் கொண்டு கூறினான், "என் கண்ணு, இப்படி அழக்கூடாது."

பல நாட்கள் பானோ வெளியே தலை காட்டவில்லை. எவரிடமும் முகம் கொடுத்துப் பேசவே அவளுக்குக் கூச்சமாக இருந்தது. வசனி மட்டும் ஓரிரு முறை வந்து சென்றாள்.

"எங்கள் வீட்டிலும் முன்பு இப்படி நிகழ்ந்ததுண்டு பானோ" அவள் கூறினாள். "அப்போது என் மாமியார் உயிருடன் இருந்தாள். தினமும் ஏதாவது கோள்மூட்டிச் சண்டையைத் தோற்றுவிப்பாள். என் கணவர் கழியை எடுத்துக்கொண்டு விரட்டுவார். பொறுக்க முடியாமல் என் அண்ணனுக்குத் தகவல் கொடுத்தேன். மூன்று பேரும் உடனடியாக வந்து இவரை விரட்டினார்கள். 'வசனியின் மேல் என்ன தவறு' என்று கூறுங்கள் என்று கேட்டார்கள். இவர் பல்லை இளித்தார். அதற்குப் பிறகு இன்றுவரை மூச்சுவிட்டது கிடையாது."

எல்லாவற்றையுமே கேட்டுக் கொண்டு பேசாமல் இருந்தாள் பானோ.

ஸந்தி மட்டும் வீட்டு வேலைகளை விட்டுவிட்டு, பானுவிடம் தினம் உட்கார்ந்து பேசுவாள்.

"நம்முடைய சீதையின் கணவர்கூட இப்படித்தான். அடிக்கடி முரட்டுத்தனமாக நடந்துகொண்டார். கோட்னே கிராமத்துச் சாமியாரிடம் போய் மந்திரித்துக் கொண்டு வந்து தாயத்தை வாங்கிக் கட்டினேன். இப்போது சீர்திருத்தம் ஏற்பட்டிருக்கிறது. உனக்கும் ஏதாவது கிரகக் கோளாறு இருக்குமோ என்று தெரிந்து வரலாமே" ஸந்தி அவளுக்கு யோசனை கூறினாள்.

பானு சரியான பதில் ஏதும் சொல்லவில்லை.

ஒரு நாள் வயலுக்கு ரொட்டி கொண்டுபோய்விட்டுத் திரும்பும் போது வசனிக்கு முன்னால் தயாளு எதிர்ப்பட்டாள்.

"அக்கா அன்னிக்கு என்ன ஆச்சு தெரியுமா? அந்த நாராயணன் ஆவேசம் வந்தவனைப்போல் பானுவை அடித்துத் தீர்த்து விட்டான்." தாவணியில் சிக்கியிருந்த முட்களை நீக்கியவாறே பேசினாள் வசனி.

"அந்த மாதிரிப் பெண்களுக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும்."

"என்றாலும் அந்தப் பெண்ணுக்கு நல்ல மன உரம். வாயைத் திறந்து ஒரு கூச்சல் போடவில்லை."

"தன் மேல் தவறு இருந்தால், யாராவது பேசுவார்களா?"

"அது கடவுளுக்குத்தான் வெளிச்சம். நாம் ஏன் ஒருத்தரைப் பற்றித் தரக்குறைவாகப் பேசவேண்டும்?"

"இவர்களெல்லாம் கடவுளைக் கையில் போட்டுக் கொண்டிருப் பார்கள். அவளுடைய நடத்தை சரியில்லை என்று நான் முன்னரே சொல்லவில்லையா? விஷயம் உண்மையாக இல்லாமலிருந்தால் எந்தக் கணவனாவது மனைவியை அப்படி அடிப்பானா?"

"ஸந்தி அம்மா என்ன சொல்லுகிறாள் தெரியுமா? உன் மைத்துனன் ஜாகர்தான் பலவந்தமாக நுழைந்தான் என்பது அவள் தரும் தகவல்."

"ஆமாம், ஸந்தி அம்மா சொன்னாள், நீயும் கேட்டுக் கொண்டாய். வீட்டிலுள்ளவள் அழைக்காமல் ஆண்மகன் உள்ளே வந்து விடுவானா? ஜாகர் வேறு எவர் வீட்டிற்குள்ளும் ஏன் நுழைந்து விடவில்லை? இப்படிப் பல தந்திரங்கள் அவளுக்குத் தெரியாதா என்ன? இப்படி ஏதாவது சொல்லிப் பதிவிரதை நாடகம் ஆடிவிடலாம் என்று எண்ணம்! வெட்கம் கெட்டவள்."

"உன் விவகாரம் எல்லாம் நமக்கு என்ன தெரியும்."

"நான் தெய்வத்துக்குப் பொதுவாகச் சொல்லுகிறேன். எங்கள் ஜாகர் ஒருநாளும் முறை தவற மாட்டான்."

"யாருடைய மனதை யார் அறிவார் தயாளு? ஒவ்வொருவரும் தம் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல் நடந்துகொள்ள வேண்டும்."

"நான் ஜாகரை என்றைக்கோ மறந்துவிட்டேன். அவருடைய அண்ணனுக்கும் எனக்கும் திருமணமாகி ஐந்து ஆண்டுகள் கழிந்து விட்டன. ஒரு தரம் கூட விழியை உயர்த்தி, அவன் என்னை ஏறிட்டுப் பார்த்ததில்லை."

தயாளுவின் இடுப்பிலே தட்டினாள் வசனி. "அப்படிப் பார்த்தால் தான் என்னத்தை வாரிக்கொள்ளுவான் அவன்?" அவள் சிரித்துக் கொண்டே கேட்டாள்.

அவளுடைய பேச்சைப் புரிந்து கொள்ளாமல் தயாளுவும் சிரிக்கத் துவங்கினாள்.

வீட்டின் கதவுப்பக்கம் யாரோ உட்கார்ந்திருப்பதைப் பார்த்து, முக்காட்டைத் தரித்துக் கொண்டு இருவரும் மௌனமாக நடந்தார்கள்.

வானத்தைப் பார்த்தவாறு, ஹூக்காக் குடுவையிலிருந்து புகையை இழுத்து வெளிவிட்டுக் கொண்டிருந்தான் சோஹன் சிங். "இந்த வருஷம் குளிர்காலம், இப்படியே போய்விட்டதே! வானத்தில் ஒரு மேகத்தைக்கூடக் காணோமே" கதவோரத்தில் உட்கார்ந்து கயிறு திரித்துக் கொண்டிருந்த கிழவர் அவனைக் கேட்டார்.

"உலகத்திலே பாவம் மிஞ்சிப் போய்விட்டது. எப்படி மழை பெய்யும்?"

"இது கலியுகம் சோஹன் சிங். பெரியவர்கள் தெரியாமலா சொன்னார்கள்? தானியம் என்ன விலை விற்கிறது பார்த்தாயா?"

"ரூபாயைக்கூட இப்போதெல்லாம் காகிதத்தில் அச்சடிக்கிறார்கள்."

"அந்தக் காகிதமும் வெள்ளைக்காரன் தன் ஊரிலிருந்து கொண்டு வந்தானாம். அதைப் பார்த்து நாமும் கற்றுக் கொண்டு விட்டால் என்ன ஆவது என்று பயம்."

"இந்த வெள்ளைக்காரன் மூளையே மூளை, இந்த மின்சாரம் கூட அவன் செய்ததுதானாமே!"

கிழவர் சோஹன் சிங்கிடமிருந்து ஹூக்காவைப் பெற்றுக் கொண்டு நீளமாகப் புகையை இழுத்து வெளியில் விட்டார். பிறகு அதை அவனிடம் திருப்பிக் கொடுத்தவாறே பேசினார்.

"மகாபாரதக் காலத்தில் அக்னி அஸ்திரம் செய்வதற்காக அர்ஜுனன் இங்கே மின்சாரத்தை வரவழைத்தானும். அவனுக்குப் பின் அதை அடக்கியாள யாருமே பிறக்கவில்லை. அதனால் திரும்ப வானத்திற்கே போய்விட்டது."

"எப்போதாவது மாமனும் மருமகனும் தனியே போனால் அவர்கள் மேல் விழுகிறது. (இடி இடிக்கும்போது மாமனும், மருமகனும் சேர்ந்து வெளியில் போனால், அவர்கள் மேல் மின்னல் தாக்கும் என்று, பாஞ்சால மக்களிடம் ஒரு நம்பிக்கை.) கிருஷ்ணனுடைய மாமன் ஒருதரம் இதைக் கல்லுடன் மோதினான் அல்லவா முன்பு? இதெல்லாம் நமக்குத் தெரியாது. ஒருவேளை கற்பனைதானோ என்னவோ?"

பிற்பகல் நேரம் வெப்பம் குறைந்துகொண்டே வந்தது. இதமான வெயிலில் உட்கார்ந்து சிறு பெண்களுடன் கழற்சிக்காய் ஆடிக் கொண்டிருந்தாள் பானோ. அப்போது வீட்டைவிட்டு வெளியே வந்த ஸந்தி அவர்களைப் பார்த்தாள்.

"பானோ இதென்னம்மா சிறு பிள்ளைகள்போல் அவர்களுடன் சேர்ந்து விளையாடிக் கொண்டிருக்கிறாயே" அவளைக் கடிந்து கொண்டாள்.

பானோ எழுந்திருந்து கட்டிலை வெயிலில் இழுத்துப் போட்டாள். "வணங்குகிறேன் அம்மா, கொஞ்சம் இங்கு உட்காருங்கள்."

விளையாடிக் கொண்டிருந்தவர்களில் சிறியவளாக இருந்த பெண்ணைத் தன்னருகில் இழுத்துக் கேட்டாள் ஸந்தி. "யாரடீ நீ."

"என் பேர் ஜூதோ. இந்தோவின் பேத்தி. பானோ சித்தியிடம் ஸ்வெட்டர்போடக் கற்றுக்கொள்ள வந்தேன்." நீண்ட ஊசியையும், நூலையும் சுழற்றிக்கொண்டே பேசினாள் அந்தப் பெண்.

கட்டிலில் உட்கார்ந்து கொண்டாள் ஸந்தி. அந்தச் சிறுமி ஜூதோவுக்கு நூலை முடிச்சிட்டு ஸ்வெட்டர் பின்னும் முறையை ஒழுங்காகக் கற்றுக் கொடுத்தாள் பானோ. அந்தப் பெண்ணும் வெகு சீக்கிரம் அந்த வகையைக் கற்றுக்கொண்டாள். பிறகு இரு பெண்களும் ஸந்தியைத் திரும்பத் திரும்பப் பார்த்தவாறே தங்கள் இல்லத்திற்கு ஏகினர்.

"பானோ, உன் தகப்பனார் உன்னைக் காணமல் தவிக்கிறாரோ, என்னவோ, நீ ஏதாவது செய்தி அனுப்புவதுதானே" ஸந்தி கூறினாள்.

"அவர் ஏன் தவிக்கப் போகிறார். பெண் எங்கேயோ செத்து மடிந்துவிட்டாள் என்று நிம்மதியாக இருப்பார்." புதிய செருப்பு அணிந்ததினால் காலில் ஏற்பட்ட கொப்புளத்தை அமுக்கியவாறே பேசினாள் பானு.

"நீ உன் தகப்பனாரிடம் ஒன்றும் தெரிவிக்கவில்லையா பானு?"

"அவரிடம் என்ன சொல்லுவது. என்னை விலைபேச முயற்சி செய்து. பலர் அவரை அணுகியபோதுதான் எனக்கு விவரமே புரிந்தது. என் உள்ளமும் உடலும் பற்றி எரியத் தொடங்கிற்று. அவர் இன்னும் அதிகநாட்கள் உயிருடன் இருக்க மாட்டாரென்று தெரியும். கடைசிக் காலத்தில் ஏன் அவருக்கு இந்தக் கெடுமதி என்று எனக்குப் புரியவில்லை. முன்னால் தம்பியின் உடல்நிலை ஏடாகூடமாக இருந்தது. அதற்காகப் பலவகையில் அவர் முயற்சி செய்ய ஒரு நியாயம் இருந்தது. இப்போது அப்படி ஒரு நிர்ப்பந்தமும் இல்லையல்லவா?"

"உன்னுடைய நன்மையையே அவர் எண்ணியிருக்கலாம் அல்லவா?"

"ஆண்டவனுக்குத்தான் தெரியும் அம்மா. யாருடனோ என்னை அனுப்புவதற்கான ஏற்பாடுகளை முடிவு செய்த பிறகுதான் எனக்கு விவரம் புரிந்தது. வீட்டிலேயே இருப்புக் கொள்ளவில்லை. இந்த நிலைக்கு நான் தள்ளப்பட்டேனே என்று என்னையே நொந்து கொண்டேன். அப்போதுதான் பக்கத்து வீட்டுக்காரர்களெல்லாம் கங்கை நீராடப் போகிறார்கள் என்று தகவல் தெரிந்தது. நானும் சென்று வரட்டுமா என்று என் தகப்பனாரைக் கேட்டேன்.'

"முதலில் அவர் தானும் வருகிறேன் என்றார். கூடவே செலவாகுமே என்ற பயம் வேறு. பிறகு 'ஜீவானியுடனே போய் வா. அவளுடன் கூடவே இரு. திருவிழாவில் எங்கும் காணாமல் போய்விடாதே' என்று கூறி அனுமதி கொடுத்தார்.

"மேலுக்கு நான் ஒன்றும் பதில் சொல்லாமலேதான் இருந்தேன். மீண்டும் எங்கள் கிராமத்துக்குத் திரும்புவது அசாத்தியம் என்று என் உள்ளுணர்வு கூறிற்று. கங்கையிலே மூழ்கி இறந்து விடுவது என்று முடிவு செய்து கொண்டேன். அங்கே, கடைசியில் எந்த நினைவுடன் மரிக்கிறோமோ அது நிறைவேறும் என்று கேள்விப் பட்டிருக்கிறேன்."

புதிய நூலை முடிந்தவாறு வினவினாள் ஸந்தி: "நீ கங்கைத் தாயிடம் என்னதான் இறுதியில் வேண்டிக்கொண்டாய்?"

"ஒருமுறை மீண்டும் சரவணனைச் சந்திக்க முடியுமானால்..."

"இப்படி அடிக்கடி நீ அவனைப்பற்றி நினைக்காதே. இறந்தவர்களால் உனக்கு ஒரு நன்மையும் செய்யமுடியாது. என்னுடைய பிறந்த ஊரில் காமோதிவாரி என்று ஒரு பெண்ணிருந்தாள். பாவம், அவள் இளவயதிலேயே விதவையாகிவிட்டாள். எப்போதும் கணவனின் நினைவிலேயே ஆழ்ந்திருந்தாள். அவள் இடுகாட்டிற்குச் சென்று கணவனுடைய அஸ்தியை எடுத்துக்கொண்டு வந்தாளாம். அவ்வளவுதான், அவனுடைய ஆவி வீட்டில் வந்து புகுந்து கொண்டது. ஒரே துர் நிகழ்ச்சிகள். மூலையில் கட்டியிருந்த எருமை முதலில் இறந்து போயிற்று. பிறகு அவளுடைய தாயாருக்குக் கண் தெரியாமல் போயிற்று. கடைசியில் அவளுக்கு இருட்டில் கணவனுடைய உருவம் தெரியலாயிற்று. மந்திரவாதியை அழைத்துப் பூசை போட்டார்கள். சடங்குச் சுத்திகரிப்பு நடந்து இவையெல்லாம் செய்தபிறகு நிலைமை சீர்திருந்திற்று. இறந்தவர்களை எண்ணி, எண்ணி மாயக்கூடாது. அவர்களிடம் என்ன மிச்சமிருக்கிறது? வெறும்ஆவி, அது யாரையாவது பிடித்துக் கொள்ளத் துடிக்கிறது."

"என் சரவணன் பிசாசாக வேண்டுமானாலும் கண்ணுக்குத் தென்படட்டும். ஒருதரம் புலப்பட்டால் மட்டும் போதும்."

"அப்புறம் நீ கங்கைக்குப் போனாயா?" ஸந்தி உரையாடலைப் பழைய இடத்திற்குத் திசை திருப்பினாள்.

"ஆமாம், கங்கைக்கரைக்குச் சென்றபிறகு, நான் வேண்டுமென்றே ஜீவனியிடமிருந்து பிரிந்துவிட்டேன். சாவதற்கு முன்னால் நெஞ்சில் ஒரு குறையும் வைத்துக்கொள்ளக்கூடாது என்று கேட்டிருக்கிறேன். எதை வேண்டிக்கொண்டே மரிக்கிறோமோ, அதனிடையிலேயே மீண்டும் பிறப்போமாம். கடைசிக் காலத்தில் செல்வத்தை விரும்பினால் பாம்பாகப் பிறப்பார்களாம். எனக்கு ஹல்வாவும், பூரியும் மிகவும் பிடித்தும். என் தாயார் அதை எனக்கு நிறையச் செய்து தருவார். அவள் இறந்த பிறகு நான் அதைச் சாப்பிடவே இல்லை. அதனால் அன்று நிறையப் பூரியும் ஹல்வாவும் சாப்பிட்டேன். பிறகு கொஞ்சம் சாராயமும் குடித்தேன். இதற்கு முன்பு ஒருதரம் சரவணனுடன் திருவிழாவிற்குச் சென்றிருந்தபோது, சாராயம் குடித்ததுண்டு. என் கணவர் மரித்தபிறகு நான் புதுத்துணி உடுத்தவே இல்லை. அன்று புதிய ஆடைகளை அணிந்து கொண்டேன். பிறகு கங்கைக் கரையிலேயே வெகுதொலைவு நடந்தேன். யாருமில்லாத தனியிடமாகப் பார்த்துத் தண்ணீரில் பாய்ந்து விட்டேன். உங்கள்

மைத்துனர் என்னைத் தொலைவிலிருந்து பார்த்து விட்டார் போலிருக்கிறது."

"யார்? நாராயணனா?"

"ஆமாம் அவர் கூச்சலிடத் தொடங்கினார். இரண்டு இளைஞர்கள் வெள்ளத்தில் குதித்து என்னை மீட்டு விட்டார்கள். "அந்தச் சமயம் பார்த்து போலீஸ்காரர் வந்து சேர்ந்தார். 'தண்ணீரில் ஏன் விழுந்தாய், உன் பெயரென்ன? எந்த ஊர்.' ஆயிரம் கேள்விகள். உடன் ஸ்டேஷனுக்கு வரச் சொல்லி உத்தரவு.

"நான் நடுங்கத் தொடங்கினேன். நாவு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டது. இவருக்கு என்ன தோன்றிற்றோ தெரியவில்லை. அந்த காவலருக்கு இரண்டு ரூபாய் கொடுத்து, அவள் என் வீட்டுக்காரிதான், கால் வழுக்கிவிட்டது" என்று கூறினார்.

"போலீஸ்காரன் இரண்டு ரூபாயை வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தான். இவர் என்னைத் திட்டத் தொடங்கினார். 'அடி பழிகாரி, என்ன செயல் செய்யத் துணிந்தாய்? முழுகிப் போயிருப்பாயே!'

"இப்போது நினைத்தாலும் பயமாகத்தான் இருக்கிறது. உண்மையிலேயே நான் முழுகியிருந்தால் என்ன ஆகிறது? எனக்கு ஒன்றும் பேசவே தோன்றவில்லை அழத் தொடங்கினேன்."

"அந்த மாதிரி சமயங்களில் நமக்கு அழத்தான் தோன்றும். வேறென்ன?" ஊசியைத் துணியில் குத்தியவாறே பேசினாள் ஸந்தி.

"உன் வீட்டாருக்குத் தெரிந்தால் என்ன சொல்லுவார்கள்?" அவர் வினவினார்.

"என் வீட்டிலே யார் இருக்கிறார்கள். அப்படி இருந்துவிட்டால் இந்தத் தொந்தரவுகளில் ஏன் சிக்கிக் கொள்ளுகிறேன்?"

"அடாடா, நீயும் என்னைப் போலத்தானா? பின் என்னோடு வந்து விடு. நான் உண்கிற இரண்டு ரொட்டியில் உனக்கும் பங்கு தராமலா போகிறேன்?"

இது கங்கை அம்மன் எனக்கு அளித்த பரிசு என்று எண்ணினேன். நான் கேட்டது இவ்வளவுதான்– "நீங்களும் வேளாளர் (ஜாட்) தானே?"

"வேறு என்ன? என்னைப் பார்த்தால் தீண்டாதானைப் போல் தோன்றுகிறதா?" நாராயணன் பதிலுக்குக் கேட்டார்.

"அதற்குப் பிறகு நான் இந்த ஊருக்கு வந்துவிட்டேன். ஆனால் ஒவ்வொரு சமயம் நான் ஆற்றிலேயே மூழ்கிப் போயிருந்தால் நன்றாக இருக்கும் என்று எண்ணுகிறேன்."– அந்தப் புதிய போர்வையின் ஓரங்களை முடிச்சுப் போட்டவாறு கூறினாள் பாறோ.

"நீ எப்படி முழுகிப் போகமுடியும். இறைவனுடைய திருவுள்ளம் யாருக்குத் தெரியும்? ஒவ்வொரு உயிரும் எத்தனை சுவாசம் விடவேண்டும் என்று அவன்தான் நிர்ணயிக்கிறான்." தலை முட்டாக்கைச் சீர் செய்தவாறே கூறினாள் ஸந்தி.

"அப்படியாவது உயிரோடு வாழ்ந்து என்ன ஆகவேண்டும்? முறைதவறி நான் நடந்து கொண்டதில் யாருக்கு லாபம்?"

"பானு! நம் கையில் என்ன இருக்கிறது. எங்கெங்கே சோறும் நீரும் எழுதியிருக்கிறதோ, அங்கே வாழ்ந்துதான் ஆகவேண்டும். யார் கண்டார்கள். உனக்குப் பிறக்கப் போகும் குழந்தையே உன்னைக் காப்பாற்றியதோ என்னவோ?"

"இது என்ன பேச்சு? உட்கார்ந்து எழுந்திருப்பதுகூட முடியவில்லை, இந்தப் போதை ஆசாமியால்."

"எல்லாம் சரிதான் மகளே! நீ நாரயாணனைச் சரிவரக் கவனித்துக் கொள். உன் குடும்பத்து வேர் இந்த கிராமத்திலும் பரவும்."

"நீ பேசுவது வேடிக்கையாக இருக்கிறது அம்மா. எங்காவது பட்டமரம் தழைத்ததுண்டா? போதைப் பொருள்கள் அவர் உடலில் எதையும் மிச்சம் வைக்கவில்லை."

"யாராவது மகாத்மாக்களை அணுகவேண்டும் பானு! நான் பழைய வரலாறுகளில் நிறையப் படித்திருக்கிறேன். பல பெண்கள் அவர்கள் மூலம் அருள்பெற்றுத் தழைத்திருக்கிறார்கள்."

"ஒரு விஷயம் சொல்லுங்கள் அம்மா!"

"கேள் மகளே."

"இந்த ஆவி என்பது என்ன?"

"யார் கண்டார்கள். ஆனால் பெரியவர்கள் வாக்குப் பொய்யல்ல, குழந்தாய்"

"இருள் சூழ்ந்த வேளைகளில் எனக்கு ஏதோ குரல் கேட்கிறது. நாராயணனின் முன்னோர்கள் யாராவது இந்த வீட்டில் உலாவுகிறார்களோ என்னவோ?"

"ஒரு காரியம் செய், பானு! இந்தத் தடவை தவறாமல் திதி கொடுக்கச் சொல்லு. இந்தக் குடும்பத்தின் பெரியவர்களுக்கு நிறைவேறாத ஆசை ஏதாவது இருக்கலாம் அல்லவா?"

பானு மறுமொழி ஏதும் கூறவில்லை.

வாசலில் ஏதோ குரல் கேட்டது. 'ஜெய் சீதாராம்' என்ற வாக்கு. விரித்த தலைமுடி, காவி உடை, கையில் கமண்டலம் ஆகியவற் றுடன் துறவி ஒருவர் பானுவின் வீட்டு முகப்பில் வந்து நின்றார்.

வாழ்கிற வீட்டில் வந்து நிற்கும் துறவியை எப்போதும் வெறுங்கையுடன் அனுப்பக்கூடாது. அவருக்கு ஒருபிடி மாவு போடு" ஸந்தி கூறினாள்.

அந்தத் துறவியின் பையில் பிச்சை இடப்போன பாளு, ஒரு கணம் துணுக்குற்றாள். அந்தப் பைராகியை அவள் மோரான் வாலியிலும் பார்த்திருக்கிறாள். ஆனால் அவர் இவளைக் கவனிக்கவே இல்லை. தனது ஜோல்னாப் பையில் மாவை வாங்கிக் கொண்டு இறைவனின் பெயரை விளித்தவாறே, அடுத்த வீட்டை நோக்கிச் சென்றார். மாவு ஒட்டிய கரத்தைத் துடைத்தவாறே பேசினாள் பாளு : "இங்கே நிழல் வந்து விட்டது அம்மா, கட்டிலை வெயிலுக்கு இழுத்து விடுகிறேன்".

"இல்லை மகளே, நான் போக வேண்டும். வீட்டு வேலை கிடக்கிறது. வயலுக்கு ரொட்டி கொண்டு போனேன். அடுப்பில் பருப்பு வெந்திருக்கும். அதில் உப்பு மிளகாய் இடவேண்டும். இன்று கொஞ்சமாவது நூற்றுவிட வேண்டுமென்று முடிவு செய்தேன். ஒன்றும் ஆகவில்லை. துணியெல்லாம் கிழிந்து போய்க் கொண்டிருக்கிறது."

"நகரத்தில் குர்த்தாவுக்கு நல்ல துணி கிடைக்குமே!".

"கடையில் வாங்குகிற துணி அதிகநாள் உழைப்பதுமில்லை. எனக்கு இந்த வேலை மிகவும் பிடித்தம். சீதாவின் விவாகத்தின் போது, என் ஓரகத்திக்காக ஒரு குர்த்தா தைத்தேன். அது இன்னும் இருக்கிறது. வெளி வாசலுக்குப் போய்வர அதுதான் உதவுகிறது."

"தலை முழுவதும் ஒரே அரிப்பு மகளே. ஏதாவது பேன் இருக்கிறதா என்று பாரேன்!" பாளுவிடம் தன் தலையைக் காட்டினாள் ஸந்தி.

பாளு அவள் தலையில் பேன் பார்க்கத் துவங்கினாள். கூடவே இனிய குரலில் பாடவும் செய்தாள்.

ஊடுருவிப் பறக்கும் காக்கையே - நீ என்
ஊருக்குப் போவாயல்லவா?
ஊருக்குப் போனால் ஒன்றும் சொல்லாதே என் தாயிடம்
தவிப்பாள் அவள் என் பொம்மையைப் பார்த்து-
ஊரிலே என் தந்தையிடமும் ஒன்றும் சொல்லாதே
உருண்டழுவார் கடைத் தெருவில் என்னை எண்ணி,
ஊரில் என் அண்ணியிடமும் ஒன்றும் பேசாதே
ஊரெல்லாம் அம்பலம் ஆக்குவாள், என் துயரம்
ஊரில் என் உடன் பிறந்தானிடம் சொல்லு

ஓடிவருவான் என்னைக் காணக் குதிரை மேலேறி...
ஊடுருவிப் பறக்கும் காக்கையே - - -

புதிதாகத் திருமணமாகி கணவன் வீடு வந்திருக்கும் மங்கை நல்லாள் தன் பிறந்த வீட்டையும், பெற்றோர்களையும் உற்றோர்களையும் நினைவுகூர்வதைப் போன்ற அந்தப் பாடல், மனதைக் கவரும் கிராமிய மொழியில் அமைந்திருந்தது.

"நீ வெகு இனிமையாகப் பாடுகிறாய் பானோ. உனக்கு என் மன நிலையை எப்படி விவரிப்பது என்று தெரியவில்லை. எந்த இடம் நமக்குத் தொந்தரவு தராமலிருக்கிறதோ, அதுவே நல்லது என்று கொள்ள வேண்டும். ஒவ்வொரு சமயம் என் மகன் பக்காவின் நினைவுவந்து நெஞ்சை அடைக்கிறது. அவனுக்கு நிச்சயம் செய்விக்கப்பட்டிருந்த பெண், இதே ஊரில் வாழ்க்கைப் பட்டிருப்பது தான் உனக்குத் தெரியுமே. அந்த வீதி வழியாகப் போகும்போதெல்லாம், உடம்பு தணலாய்க் கொதிக்கிறது."

"எல்லாம் கடவுளின் இச்சை அம்மா. மனிதவசத்தில் என்ன இருக்கிறது. இதோ பார் உங்கள் தலையில் ஒரு பேன்." அதைப் பிடித்து ஸந்தியின் உள்ளங்கையில் வைத்தாள் பானோ.

"யார் தலையிலிருந்தோ இது வந்திருக்கிறது. தலை அரிப்புத் தாங்கவே முடியவில்லை." அதை விரல்களினால் நசுக்கினாள் ஸந்தி.

பானோ எழுந்திருந்து கை கழுவியவாறு கூறினாள். "இனி ஒன்றும் இல்லை அம்மா."

ஸந்தி தலையை முடிந்து கொண்டாள். பிறகு முக்காட்டைத் தலையில் தரித்துக் கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தாள். "பானோ உன் வீட்டு மேடையின் ஓரம் இடிந்துபோய்க் கிடக்கிறதே!"

"ஆமாம் அம்மா. எப்போது இடிந்ததென்றே தெரியவில்லை. ஏதோ மோதிவிட்டாற்போல் இருக்கிறது. ஒருநாள் குளக்கரையிலிருந்து மண்ணை எடுத்துவந்து இதைச் சீராக்க வேண்டும்.

"நீ பிரார்த்தனைப் பாடல்களையெல்லாம் வெகு நன்றாகப் பாடுவாயாமே, ஒரு நாள் பாடிக் காட்டேன். நாங்கள் எல்லாம் எதற்கும் உதவாத ஆட்கள்."

"என் தாயார் தவறாமல் குருத்வாரா செல்வது வழக்கம். நானும் உடன் செல்லுவேன். அங்கே இருந்த பூசாரியிடம், எனக்கும் பிரார்த்தனைப் பாடல்களைப் பாடும் முறையையும், ஜபநூலைப் படிக்கும் வகையையும் கற்றுத் தரும்படி கேட்டுக் கொண்டார். பூசாரி கற்றுத் தந்ததை எல்லாம் மனப் பாடமாகவே உருப் போட்டு விட்டேன். இன்றும் அவை என் நினைவில் இருக்கின்றன.

வாழ்கிற வீட்டில் வந்து நிற்கும் துறவியை எப்போதும் வெறுங்கையுடன் அனுப்பக்கூடாது. அவருக்கு ஒருபிடி மாவு போடு" ஸந்தி கூறினாள்.

அந்தத் துறவியின் பையில் பிச்சை இடப்போன பாஞே, ஒரு கணம் துணுக்குற்ருள். அந்தப் பைராகியை அவள் மோரான் வாலியிலும் பார்த்திருக்கிருள். ஆனால் அவர் இவளைக் கவனிக்கவே இல்லை. தனது ஜோல்னாப் பையில் மாவை வாங்கிக் கொண்டு இறைவனின் பெயரை விளித்தவாறே, அடுத்த வீட்டை நோக்கிச் சென்ருர். மாவு ஒட்டிய கரத்தைத் துடைத்தவாறே பேசினாள் பாஞே : "இங்கே நிழல் வந்து விட்டது அம்மா, கட்டிலை வெயிலுக்கு இழுத்து விடுகிறேன்".

"இல்லை மகளே, நான் போக வேண்டும். வீட்டு வேலை கிடக்கிறது. வயலுக்கு ரொட்டி கொண்டு போனேன். அடுப்பில் பருப்பு வெந்திருக்கும். அதில் உப்பு மிளகாய் இடவேண்டும். இன்று கொஞ்சமாவது நூற்றுவிட வேண்டுமென்று முடிவு செய்தேன். ஒன்றும் ஆகவில்லை. துணியெல்லாம் கிழிந்து போய்க் கொண்டிருக்கிறது."

"நகரத்தில் குர்த்தாவுக்கு நல்ல துணி கிடைக்குமே!".

"கடையில் வாங்குகிற துணி அதிகநாள் உழைப்பதுமில்லை. எனக்கு இந்த வேலை மிகவும் பிடித்தம். சீதாவின் விவாகத்தின் போது, என் ஓரகத்திக்காக ஒரு குர்த்தா தைத்தேன். அது இன்னும் இருக்கிறது. வெளி வாசலுக்குப் போய்வர அதுதான் உதவுகிறது."

"தலை முழுவதும் ஒரே அரிப்பு மகளே. ஏதாவது பேன் இருக்கிறதா என்று பாரேன்!" பாஞேவிடம் தன் தலையைக் காட்டிஞள் ஸந்தி.

பாஞே அவள் தலையில் பேன் பார்க்கத் துவங்கிஞள். கூடவே இனிய குரலில் பாடவும் செய்தாள்.

ஊடுருவிப் பறக்கும் காக்கையே - நீ என்
ஊருக்குப் போவாயல்லவா?
ஊருக்குப் போனால் ஒன்றும் சொல்லாதே என் தாயிடம்
தவிப்பாள் அவள் என் பொம்மையைப் பார்த்து-
ஊரிலே என் தந்தையிடமும் ஒன்றும் சொல்லாதே
உருண்டழுவார் கடைத் தெருவில் என்னை எண்ணி,
ஊரில் என் அண்ணியிடமும் ஒன்றும் பேசாதே
ஊரேல்லாம் அம்பலம் ஆக்குவாள், என் துயரம்
ஊரில் என் உடன் பிறந்தானிடம் சொல்லு

ஓடிவருவான் என்னைக் காணக் குதிரை மேலேறி...
ஊடுருவிப் பறக்கும் காக்கையே - - -

புதிதாகத் திருமணமாகி கணவன் வீடு வந்திருக்கும் மங்கை நல்லாள் தன் பிறந்த வீட்டையும், பெற்றோர்களையும் உற்றோர் களையும் நினைவுகூர்வதைப் போன்ற அந்தப் பாடல், மனதைக் கவரும் கிராமிய மொழியில் அமைந்திருந்தது.

"நீ வெகு இனிமையாகப் பாடுகிறாய் பானோ. உனக்கு என் மன நிலையை எப்படி விவரிப்பது என்று தெரியவில்லை. எந்த இடம் நமக்குத் தொந்தரவு தராமலிருக்கிறதோ, அதுவே நல்லது என்று கொள்ள வேண்டும். ஒவ்வொரு சமயம் என் மகன் பக்காவின் நினைவுவந்து நெஞ்சை அடைக்கிறது. அவனுக்கு நிச்சயம் செய்விக்கப்பட்டிருந்த பெண், இதே ஊரில் வாழ்க்கைப் பட்டிருப்பது தான் உனக்குத் தெரியுமே. அந்த வீதி வழியாகப் போகும்போதெல்லாம், உடம்பு தணலாய்க் கொதிக்கிறது."

"எல்லாம் கடவுளின் இச்சை அம்மா. மனிதவசத்தில் என்ன இருக்கிறது. இதோபார் உங்கள் தலையில் ஒரு பேன்." அதைப் பிடித்து ஸந்தியின் உள்ளங்கையில் வைத்தாள் பானோ.

"யார் தலையிலிருந்தோ இது வந்திருக்கிறது. தலை அரிப்புத் தாங்கவே முடியவில்லை." அதை விரல்களினால் நசுக்கினாள் ஸந்தி.

பானோ எழுந்திருந்து கை கழுவியவாறு கூறினாள். "இனி ஒன்றும் இல்லை அம்மா."

ஸந்தி தலையை முடிந்து கொண்டாள். பிறகு முக்காட்டைத் தலையில் தரித்துக் கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தாள். "பானோ உன் வீட்டு மேடையின் ஓரம் இடிந்துபோய்க் கிடக்கிறதே!"

"ஆமாம் அம்மா. எப்போது இடிந்ததென்றே தெரியவில்லை. ஏதோ மோதிவிட்டாற்போல் இருக்கிறது. ஒருநாள் குளக்கரையி லிருந்து மண்ணை எடுத்துவந்து இதைச் சீராக்க வேண்டும்.

"நீ பிரார்த்தனைப் பாடல்களையெல்லாம் வெகு நன்றாகப் பாடுவாயாமே, ஒரு நாள் பாடிக் காட்டேன். நாங்கள் எல்லாம் எதற்கும் உதவாத ஆட்கள்."

"என் தாயார் தவறாமல் குருத்வாரா செல்வது வழக்கம். நானும் உடன் செல்லுவேன். அங்கே இருந்த பூசாரியிடம், எனக்கும் பிரார்த்தனைப் பாடல்களைப் பாடும் முறையையும், ஜபநூலைப் படிக்கும் வகையையும் கற்றுத் தரும்படி கேட்டுக் கொண்டார். பூசாரி கற்றுத் தந்ததை எல்லாம் மனப் பாடமாகவே உருப் போட்டு விட்டேன். இன்றும் அவை என் நினைவில் இருக்கின்றன.

ஆனால், வரவர இப்போதெல்லாம் தியானத்தில் மனம் லயிப்பதே இல்லை. இவைகளினால் 'என்ன பலன்' என்று எண்ணத் தொடங்குகிறேன். சரவணன் நோயுற்றபோது, நான் செய்து கொண்ட வேண்டுதல்களுக்கு ஒரு கணக்கே இல்லை. ஆனால் ஒன்று கூடப் பலிக்கவில்லை. தெய்வ நம்பிக்கையே பொய் என்று எண்ணத் தொடங்குகிறேன்."

"அப்படி எல்லாம் பேசாதே மகளே! நமக்கு அவருடைய விருப்பம் என்ன என்று எப்படித் தெரியும்?"

'இனிமேல் எப்படி வேண்டுமானாலும் நிகழட்டும்' என்று நான் முடிவு செய்துவிட்டேன் எல்லாம் அவன் சித்தம்."

"அப்படி எல்லாம் எண்ணாதே மகளே. எப்போதும் தெய்வ நினைவு மனதில் இருக்கவேண்டும். என் மகள் ஸோதாவின் மாமியார், ஒரு மாதமாகப் படுத்த படுக்கையாக இருக்கிறாள். உடலின் பகுதிகளே மரத்துவிட்டன. அவள் உடலில் உயிர் ஒட்டிக் கொண்டிருக்கிறது, அவ்வளவுதான். அதைக் காணும் போதெல் லாம் நான் வேண்டிக்கொள்வது இவ்வளவுதான்: உடலில் நல்ல வலு இருக்கும்போதே உயிர் பிரிந்துவிட வேண்டும்."

பானோ உள்ளே சென்று, பருப்பை ஒரு தட்டில் கொண்டு வந்து நோம்பத் தொடங்கினாள்.

"நாராயணன் உளுந்து சாப்பிடுகிறானா? அது வாயுப்பிடிப்பை உண்டாக்குகிறது என்று என்னிடம் சொன்னதுண்டே" தக்ளியி லிருந்து நூலைச் சிட்டத்தில் சுற்றியவாறே பேசினாள் ஸந்தி.

"ஆமாம் அம்மா. மறந்தே போனேன். இவருக்கு இது ஒத்துக்கொள்வதே இல்லை. மாலையில் வீணாகத் தகராறு வருகிறது. சரவணனுக்கு உளுத்தம் குழம்பு மிகவும் விருப்பம். அடிக்கடி தயாரிக்கும்படி சொல்லுவார்.

"இனி அவனைப்பற்றி அடிக்கடி நினைக்காதே. உனக்கு நல்லது செய்வதற்காகவா அவன் உன்னைத் திருமணம் செய்து கொண்டான்." ஸந்தி வீடு திரும்பினாள்.

உளுந்தை மீண்டும் பானையில் இட்டாள் பானோ. இன்னொரு பானையிலிருந்து சிறு பயறைத் தாலத்தில் எடுத்து நோம்பத் தொடங்கினாள். ஸந்தி வீடு திரும்பும் முன்பு கூறிய சொற்கள் அவளுடைய செவிப்பறையில் மீண்டும் ஒலித்தன.

குளிர் காலம் மெல்ல நீங்கிற்று.

கம்பளம், போர்வை, மெத்தை ஆகியவற்றைச் சுருட்டிப் பரண்மேல் வைத்தார்கள் கிராமத்தினர்.

குளிரில் ஒடுங்கிக் கிடந்த குழந்தைகள் சிறு வண்டுகளைப் போல் சந்துகளில் ஆடி மகிழ்ந்தனர். அதன் நடுவில் கலங்கலாகியிருந்த சகதியும் காயத் தொடங்கிற்று. கோதுமை முதிர்ந்து மஞ்சள் நிறம் பெற்றது. பகல் பொழுது நீளமாகத் துவங்கியது.

ஒரு நாள் லோட்டா நிறையத் தேநீரைக் கணவனிடம் கொடுத்தவாறே, கணவனிடம் கேட்டாள் பானோ : "நாம் சிறிது மண்ணைக் கொத்திப் பயிர்ச் செலவு செய்தால் என்ன?"

"என் தகப்பனாரின் காலத்தில் ,எங்களிடம் நாலு ஏர்க்கான உழவு நிலம் இருந்தது. விளையும் தானியங்களைச் சேகரித்து வைக்க வீட்டில் இடமிராது. தானே முனைந்து வேலை செய்யாவிட்டால் உழவு என்ன பலனைக் கொடுக்கும்? இவ்வளவு நாள் வரை நான் கலப்பை பிடிக்கவில்லை. நமக்குப் பின்னால் சந்ததி என்ன வாழ்கிறது? இரண்டு பேர் உண்பதற்கான தானியம் நம் பங்கிற்குக் கிடைக்கத்தானே செய்கிறது?" நாராயணன் அசிரத்தையாகப் பதில் கூறினான்.

"குத்தகைக்காரன் இப்போதெல்லாம் ஒழுங்காக அளக்கிறானா என்ன? எங்கு பார்த்தாலும் பொய்மை, சூது, களவாணித்தனம். கொஞ்சம் ஆள் அயர்ந்தால் போதும், திருடுதான்"

"நீ சொல்வதெல்லாம் சரிதான் பானோ. சொந்தச் சாகுபடி செய்ய, உழவு மாடு வாங்க வேண்டும். எல்லா வயல் வேலைகளையும் செய்ய வேண்டும். இடம் இடமாகத் திரியவும் வேண்டும். எல்லாம் யாருக்காக? நமக்கென்ன பெண் விவாகத்திற்கு நிற்கிறாளா? எதற்காக நாம் கஷ்டப்பட வேண்டும்"

"பெண் வாரிசு இருந்தால்தானா? நாலு காசு கையில் இருந்தால் தான் யாரும் மதிக்கவே செய்வார்கள். மிக வேகத்துடன் முதுமை நம்மை நெருங்கிக் கொண்டிருக்கிறதல்லவா?"

"மரம் வைத்தவன் தண்ணீரும் ஊற்றுவான். இதுவரையில் உணவளித்தவன் நாளைக்கும் தருவான். கல்லினுள் வாழ் தேரைக்கும் அவன்தான் படி அளக்கிறான்."

"அதில் ஐயமில்லை. ஆனால் வாய்க்குள் உணவை நம் விரல்தானே கொண்டு போக வேண்டும்." பானோ குந்தாளத்தின் உதவியோடு வீட்டின் பழுதான மூலையைக் கொத்திக்கொண்டிருந்தாள்.

"இன்று என்ன திடீரென்று இந்த வேலையில் புகுந்தாய்?" நாராயணன் கேட்டான்.

"பெரியவர்கள் புதைத்துவைத்த சொத்து ஏதாவது கிடைக்குமா? என்று பார்க்கத்தான்," சிரித்துக்கொண்டே பதிலிறுத்தாள் பானோ.

"எங்கள் அப்பாவின் காலத்தில் ஒருதரம் என் பாட்டி, ஒரு கூடை நிறைய வெள்ளி ரூபாயைத் தோண்டி எடுத்தாள். அவளுடைய மாமியார் அந்த வீட்டில் புதைத்து விட்டுப் போனளாம். கடுதாசி ரூபாய் வந்த பிறகு, யாரும் அதை மண்ணில் மறைக்கக் கூட முடியாது. என்றாலும் பானு, நீ எதற்காக இப்படி அந்த மூலையை இடிக்கிறாய்?"

"ஒன்றும் வேலையில்லை. அந்த மூலையையாவது சரி செய்யலாம் என்று தொடங்கினேன். திரும்பத் திரும்ப மண்ணை அப்பி வைக்கிறேன், விரிந்து போய்ப் பிளந்து விடுகிறதல்லவா?"

"அது ஒன்றும் அவ்வளவு மோசமாக இருக்கவில்லை. கையையும், காலையும் சும்மா வைத்துக் கொண்டிருக்க உன்னால் முடியாது. எப்போதாவது கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும். இப்படி வேலை செய்து என்ன லாபம்?"

"நீங்கள் சொல்வது உண்மை, என்றால் வேலை இல்லாமல் இருக்க முடியாது. ஏதாவது பணியில் ஈடுபட்டிருந்தால்தான் நான் அமைதியுடன் வாழ்வது சாத்தியம்."

"நீ சொல்வது உண்மைதான். அதுதான் மனித தர்மம். ஆனால் எப்போதாவது ஓய்வெடுத்துக் கொள்ளவும் வேண்டுமல்லவா?"

"சோடாவைக் கரைத்து வைத்திருக்கிறேன். வெளியில் போகும் போது துணிமணிகளை மாற்றிக் கொண்டு புறப்படுங்கள்.

"தான் அணிந்து கொண்டிருந்த உடையைக் கவனித்துப் பார்த்தான் நாராயணன். "இது வெளுப்பாகத் தானே இருக்கிறது?"

"அழுக்கு ஊறிப் போனால், பிறகு நீங்குவது எளிதல்ல"

"எப்பவும் அழுக்கு நிரந்தரமாக ஒட்டாது."

"போன தடவை நீங்கள் கழட்டிப் போட்ட துணிகளில், அழுக்கு மிகுதியினால் சீலைப்பேன் கூட வந்து விட்டது."

"அது உன் உடம்பிலிருந்து ஏறியிருக்கும்." சிரித்துக் கொண்டே கூறினான் நாராயணன்.

"நான் தினமும் காலையில் எழுந்திருந்து பச்சைத் தண்ணீரில் குளிக்கிறேன். என் துணியில் சீலைப்பேன் எப்படி வரும்."

"ஒரு விஷயம் சொல்லட்டுமா பானு! நீ வித்தியாசமாக எண்ணிக் கொள்ள மாட்டாயே!"

"என்னது?"

"நீ குளித்து முழுகிப் பூஜையெல்லாம் செய்கிறாய். கடவுள் உன்னை சுவர்க்கத்திற்கு இட்டேகுவார். நான் தனியாக நரகத்தில் என்ன செய்வேன்?"

"இத்தகைய கொடூரமான வேடிக்கைப் பேச்சுக்கள் நல்லதல்ல."

"வெள்ளிரிக்காய்.... தர்பூஜ் பழம்..." தெருவில் விற்பனை செய்த வாறு மாதொருத்தி சென்றுள்.

"பானே, தர்பூஜ் பழம் வாங்கேன்." நாராயணன் கூறினன்.

"நீங்கள் என்ன சிறு குழந்தையா?"

"அப்படியே இருக்கட்டுமே. வாங்கேன் பானே!"

முந்தானையில் தானியத்தை ஏந்தியவாறு பானே தர்பூஜ் பழம் வாங்க வெளியே சென்றுள்.

அதைத் தராசுத் தட்டில் வாங்கியவாறு, பழம் விற்கும் ஸைரா(ன்) ஆரைன் கேட்டாள். "நீ பானே இல்லையா?"

அவளை ஏறிட்டுப் பாராமலே பதில் கூறினுள் பானே. "ஆமாம்!"

"நலமாக இருக்கிறுயா பானே? உன் நினைவே கனவைப்போல் ஆகிவிட்டது."

"இப்போதும் நீ பழம் விற்க மேரா(ன்) வாலிக் கிராமத்துப் பக்கம் போகிறுயா ஆரைன்!" தயங்கியவாறே வினவினுள் பானே.

"ஆமாம், போவதுண்டு".

"அவருடைய வீட்டில் எல்லோரும் நலமா?"

யாருடைய வீட்டைப் பற்றிப் பானே கேட்கிறுள் என்பது, பழம் விற்கும் ஸைரானுக்குப் புரிந்து விட்டது. கோதுமையின் எடைக்கு எடை சிராகப் பழத்தை இட்டு நிறுத்தவாறே அவள் வினவினுள்: "எப்போது அந்த வீட்டில் உனக்கு எந்த விதமான பங்கும் இல்லையோ, நீ ஏன் அவர்களைப் பற்றிக் கவலைப்படுகிறுய்?"

"வாஸ்தவம், நீ சொல்வது மிகவும் உண்மை," அவளுடைய பேச்சும் எண்ணமும் தடுமாறின. அவள் தனக்குத்தானே கூறிக் கொண்டாள்.

தர்பூசனிப் பழங்களைத் தன் முந்தானையில் பெற்றுக் கொண்டாள், பானே. ஸைரான் தானுகவே ஒரு சிறிய பழத்தையும் எடுத்து அவளுடைய முந்தானையில் இட்டாள். பானே அவளை ஏறிட்டுப் பார்த்தாள். ஆனுல் வாய் திறந்து எதுவும் பேசவில்லை. ஸைரா(ன்) கூடையினடியில் கையைக் கொடுத்தாள். பிறகு பானேவை நோக்கிக் கூறினுள், "கொஞ்சம் தூக்கிவிடேன்." "இதோ" என்று கூறியவாறே அவள் அந்தக் கூடையை அவளுடைய தலைக்கு ஏற்றுவதில் உதவி செய்தாள். அவள் சிறிது தூரம் நடந்து செல்லும்வரை பார்த்துக் கொண்டே நின்ற பானே, பழத்துடன் வீட்டினுள் வந்தாள்.

கீரை நறுக்கும் கத்தியையும், தர்பூசனிப் பழத்தையும் ஒரு தாலத்தில் வைத்து, அதை நாராயணனிடம் கொடுத்தாள் பானு. பிறகு மண்ணை நோண்டத் துவங்கினாள்

"உனக்கு வேண்டாமா?" பழத்தை நறுக்கியவாறே வினவினான் நாராயணன். "வேண்டாம்," அவள் மறுதளித்தாள். "கொஞ்சம் சாப்பிடு பானு!"

"இல்லை, ஏனோ மனதுக்குப் பிடிக்கவில்லை."

"வேடிக்கை தான். சாப்பிடுவதில் கூட உனக்கு ஆசை இல்லையே!"

"இந்தத் தடவையும் நாம் கங்கா ஸ்நானத்திற்குப் போவோமா?"

"போன தடவை கங்கையம்மன் உன்னை எனக்குக் கொடுத்தாள், இப்போது திருப்பி எடுத்துக் கொண்டு போய்விட்டால் என்ன செய்வது?"

"எனக்குப் புகலிடம் கொடுப்பது அன்னையின் விருப்பமாக இருந்திருந்தால், முதல் தடவையிலேயே ஏற்றுக் கொண்டிருக்க மாட்டாளா? என்னைப் போன்ற பாவிகளுக்கு அவளுடைய மடியில் இடம் ஏது?

"நீ என்ன பாவம் செய்தாய்?"

"இப்போது இல்லாவிட்டாலும் முற்பிறப்பில் செய்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் இந்தமாதிரி..." அவள் மேலே பேசாமல் மௌனமானாள்.

நாராயணன் சிலகணங்கள் அவளையே நோக்கினான். பிறகு பழத்தைத் தின்றுகொண்டே பேசினான்: "பானு, உனக்கு ஏதாவது தேவையானால் சொல்லு. சிறிதுகூடத் தயங்காதே. எதுவும் இல்லையே என்ற குறையே உனக்குக் கூடாது. நான் என் சொத்தை யாருக்காகச் சேர்க்க வேண்டும்?"

"எப்போதாவது அக்கா கர்த்தாரியின் வீட்டிற்குப் போய்வர வேண்டும். இந்த மாதிரித் தம்பி கிடைத்திருக்கிறானே என்று அவள் ஆதங்கப்படுவாள்."

"எப்போதாவது போகவேண்டுமென்று எண்ணம் எழவே செய்கிறது. ஆனால் போவது எப்படி? அவளுடைய வீடு எத்தனை தொலைவு இருக்கிறது தெரியுமா? உத்திரப்பிரதேசம் பக்கத்திலிருக்கிறது என்று நினைத்தாயா? ஒருபக்கத்து ரயில் சத்தம் மட்டும் இருபத்தைந்து ரூபாய் ஆகிறது."

"அவருக்கு எத்தனை அண்ணன், தம்பி இருக்கிறார்கள். நீங்கள் ஒருவர்தான். சகோதர பாசத்தைவிட, இருபத்தைந்து ரூபாய் பெரிதாகப் போய் விட்டதா ?"

"உனக்கு ஒன்றுமே தெரியவில்லே. எல்லோரும் அவரவர்களுடைய இடத்தில் சுகமாக வாழ்கிருர்கள். நாம் போகாமலே இருந்து விட்டால் நம்மை யாரும் எதிர்பார்க்கவே மாட்டார்கள். பழத்தின் துண்டொன்றை எடுத்து பாருேவின் அருகில் வைத்தான் நாராயணன்.

"தொடர்பே இல்லாமல் ஏன் இருக்கவேண்டும்? உயிரோடு இருக்கும்போதே இவ்வாறு துண்டுதுண்டாக வாழ்வதில் யாருக் கென்ன லாபம்?"

"சரி, அதுதான் உன் விருப்பமாளுல், அடுத்த பண்டிகை நாளன்று அக்காவைக் கண்டு ஆசி பெற்று வருகிறேன்."

"பெரியோர்கள் சொல்வது வழக்கம், வீட்டில் பிறந்த பெண்கள் நின்றழுதால், வீடே கலகலத்துப் போகுமாம்".

"அப்படியாளுல் உங்கள் வீட்டில் பூகம்பமே நிகழவேண்டும்."

"ஏனே?"

"நீ ஒரு நாளில் எவ்வளவோ தடவை துயரப் பெருமூச்சு விடுவதைப் பார்த்திருக்கிறேன்."

"தூ, நான் எதற்குப் பெருமூச்சுவிட வேண்டும்." வைக்கோல் துகள்களைக் குழைத்த மண்ணில் கலந்து, அதை வாளுயில் வாரிச் சுவரின் உதிர்ந்த பாகங்களை மெழுகுவதற்காக வெளியில் கொண்டு போனுள்.

வெளியில் சுத்தம் செய்யப்பட்ட கோதுமையை, நீரில் கழுவி உலர்த்தியிருந்தார்கள். கன்றுக்குட்டி ஒன்று அதைத் தின்னவந்தது.

"இந்த சனியன் காலையிலிருந்து என் கழுத்தை அறுக்கிறது." என்று கூறியவாறே, ஈரக்கையுடன் அந்தக் கன்றுக்குட்டியை விரட்டப் போனுள்.

துள்ளி ஓடி சந்தின் நடுவில் நின்று கொண்ட கன்று, திரும்பி நின்று பார்த்து, மீண்டும் வர யத்தனிப்பதைப் புலப்படுத்திற்று.

பாருே அதை மீண்டும் விரட்டினுள். வெகு தொலைவு அதன் பின்னுலேயே சென்று துரத்தினுள். வீதியின் இறுதி முனையில் சென்று நின்று அது பாய்ச்சல் காட்டிற்று. தானியக் கட்டைச் சுமந்தவாறு எதிரில் வந்த வாரியாமைச் சேர்ந்த தன்-கௌரை அவள் வீதியில் சந்தித்தாள்.

"அடி பாருே, உள் பாவாடையுடனேயே வீதியில் உலாவுகிருயே, இதையும் உன் பிறந்த ஊர் மாதிரி ஆக்கிவிட வேண்டுமென்று எண்ணமா?"

அவள் என்ன சொல்லுகிறாள் என்று அந்தக் கணம் பானோவுக்குப் புரியவில்லை. "வணங்குகிறேன் அம்மா" என்று மட்டும் கூறினாள்.

"எல்லா நலன்களும் பெற்று நீ வாழவேண்டும். மகளே. எங்கே, நீயும் சிங் சபாவைச் சேர்ந்த பெண்ணாகி விட்டாயோ என்று எண்ணினேன்."

"கோதுமையைக் கழுவி உலர்த்தி வைத்திருந்தேன் அம்மா, அந்தக் கன்றுக்குட்டி அதைத் தின்ன வந்தது. அதை விரட்டிக்கொண்டே வீதி முனைவரைக்கும் வந்துவிட்டேன். அவசரத்தில் எல்லாம் மறந்து போயிற்று."

"பரவாயில்லை, இன்னும் சிலநாட்கள் கழிந்தால், நீ இந்த மண்ணிற்கே சொந்தமுடையவளாகிவிடுவாய். அதற்குப் பிறகு எல்லாம் நினைவுக்கு வந்துவிடும்" சிரித்துக் கொண்டே கூறினாள் தன்கௌர்.

பானோவுக்கு அவளுடைய கூற்று எதுவும் புரியவில்லை. பேச்சை திசை திருப்பும் பொருட்டு அவள் கேட்டாள்: "மகள் ஊருக்குப் போய்விட்டாளா?

"ஆமாம் மகளே. இந்தப் பச்சை உடம்பில் அனுப்பவேண்டாம். இரண்டு எருமை கன்றுபோட்டுப் பால் தருகிறது, கொஞ்சம் வலுப்பிடிக்கட்டும் என்றுதான நினைத்தேன். அவர்களுடைய வீட்டுக்காரர்கள் கேட்கவில்லை. அவர்களுக்கும் இவளுடைய தேவை அதிகமாக இருக்கிறது. அவர்களுடைய வீட்டிலும் குழந்தை பிறந்திருக்கிறதாம்."

"நல்லதுதான். இரண்டு இடங்களிலும் குடும்பம் பெருகுவது." இதைக் கூறியபிறகு அவளுக்கே வெட்கமாகப் போய்விட்டது.

ஒரு கையில் கதிர் அரிவாளும், இன்னொரு கையில் கயிறும் ஏந்தியவாறு எதிர்ப்பட்டான் லாம்பேயின் மகன் இந்தர். அவன் பானோவைப் பார்த்துப் பல்லை இளித்தான். கண்ணால் சாடையும் காட்டினான்.

"நீ நிர்மூலமாகப் போ" என்று மனதுக்குள் திட்டியவாறு, அவள் வேகமாக அவனைக் கடந்து நடந்தாள். வேகமாக நடக்க முனைந்தபோது, எதிரே கல்தடுக்கி கட்டைவிரல் நகம் பெயர்ந்து உதிரம் பெருகிற்று. அதைப் பொருட்படுத்தாமல் அவள் வீடுவந்து சேர்ந்தாள். இந்தர் செய்த காரியத்தை நாராயணனிடம் சொல்லிவிடுவோமா என்று ஒருகணம் யோசித்தாள். பிறகு அவனால் என்ன செய்துவிட முடியும் என்று எண்ணி அமைதியாக

இருந்தாள். பழுதடைந்த மூலைக்கு மீண்டும் அவள் மண் அப்பினாள். 'நாளை இது நன்றாகக் காய்ந்து போகும்' என்ற எண்ணத்தில் அவள் அன்று மாலை இருள் சாயும்வரை அதே பணியில் ஈடுபட்டு இருந்தாள். பிறகு கை கழுவிவிட்டு, சட்டியிலிருந்து பருப்பை எடுத்து மசித்தாள். கோதுமை மாவு பிசைந்தாள். அடுத்துப் பாலையும் காய்ச்சினாள்.

ரொட்டி சுடுவதற்காக அடுப்பில் கல்லைப்போடும் தறுவாயில், பிற்பகல் துணி துவைக்கப் போனபோது நாராயணனின் பாகைத் துணியை மறந்துபோய் வந்தது நினைவில் உதித்தது. கிணற்றுச் சுவரின் மறுபுறம் அது விழுந்ததா என்றும் தெரியவில்லை. 'கண்ணெதிரில் இருந்திருந்தால் நிச்சயம் நினைவு வந்திருக்கும்'- அவள் எண்ணினாள். யாராவது தூக்கிக் கொண்டு போயிருந்தால், இதுவரை எடுத்துக்கொண்டு போகாமலிருந்தாலும் பொழுது விடிவதற்குள் எவரும் கைப்பற்றிக் கொள்ளலாம்.

இப்போதே போய் எடுத்து வந்துவிடுவது நல்லது. இல்லாவிட்டால் இன்னும் அதிக இருள் சூழ்ந்துவிடலாம். அடுப்பில் எரிந்து கொண்டிருந்த விறகை வெளியில் இழுத்தாள். கோதுமை மாவின்மேல் ஈரத்துணியை விரித்தாள். பாவாடையை அணிந்து கொண்டு கதவை இழுத்து மூடிவிட்டுக் கிணற்றங்கரைப் பக்கம் சென்றாள்.

கிராமத்தின் தர்மசத்திரத்தின் கதவைத் தாண்டி, சிறு குளத்தை அணுகும் வேளையில் யாரோ பின் தொடர்வது போல் ஒரு பிரமை தோன்றிற்று. சட்டென்று திரும்பிப் பார்த்தாள். ஆனால் இருளில் ஒன்றும் புலப்படவில்லை. சிறு குளத்தையும் கடந்து, இடுகாட்டையும் தாண்டி கிணற்றின் பக்கமாக நடந்தாள்.

கேணியின் மறுபுறத்துச் சுவரை அடுத்துக்கிடந்த நாராயணனின் பாகைத்துணியைச் சுருட்டி எடுத்துக் கொண்டு திரும்பி நடந்தபோது, யாரோ தொண்டையைக் கனைத்துக் கொண்டார்கள். பாரோவுக்குச் சிறிது அச்சமாக இருந்தது.

"வேறு யாருமில்லை அண்ணி, நான்தான் ஜாகர்." அவள் முன்பு எதிர்ப்பட்டான். பாரோ சுற்று முற்றும் பார்த்தாள்.

"பயப்படாதே அண்ணி, ஆண்டவன் சத்தியமாகச் சொல்லுகிறேன். நான் ஒரு தீங்கும் செய்யமாட்டேன்."

பாரோ ஒன்றும் பேசவில்லை.

"உன் கோபம் இதுவரை குறையவில்லையா?"

இன்னும் பாரோ பதில் ஒன்றும் சொல்லவில்லை.

"அண்ணன் நாராயணன் உன்னை அடித்தான என்று கேள்விப் பட்டதும், நான் அப்படியே பொங்கினேன் அண்ணி, ஓடி வந்து அவனுடைய எலும்பைப் பொடித்துவிடுவோமா என்று யோசித் தேன். அண்ணி வேண்டுமானால் நீ என் உயிரை நீக்கிவிடு, ஆனால் இப்படிச் சினங்கொள்ளாதே" தழதழத்த குரலில் பேசினான் ஜாகர்.

"ஜாகர், நீ சரவணனுடைய தோழனல்லவா?" பானோ கெஞ்சினாள்.

"அதனால்தான் எனக்கு உன்மேல் இவ்வளவு பரிவு அண்ணி, உண்மையிலேயே சொல்லுகிறேன், நான் உனக்காக உயிரையே கொடுக்கவும் சித்தமாக இருக்கிறேன்."

"நான் என்ன பேச முடியும் ஜாகர்? ஆண்டவன் எவரையும் இப்படிச் சோதிக்க வேண்டாம்."

"நீ ஒரு வார்த்தை சொன்னால் போதும். நான் எது வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்."

"எனக்கு உன்னைத் தெரியாதா?"

"சொன்னால் நம்பமாட்டாய், முதல்தடவை உன்னைப் பார்த்ததிலிருந்தே என் நெஞ்சு உனக்காகக் கரையத் தொடங்கி விட்டது. குடிகார நாராயணன் எங்கே? பானோவின் சௌந்தர்யம் என்ன? எங்கேயாவது இணை சொல்ல முடியுமா? இப்பவும் உனக்கு நல்வாழ்வு மீதி இருக்கிறது அண்ணி."

"நீ குடிவெறியில் பிதற்றுகிறாய்."

"உன்னைக் கண்டதும் எல்லாம் இறங்கிவிட்டது. இந்த மாதிரி உன்னைத் தனியே சந்திக்கும் ஒரு வாய்ப்பிற்காக, எவ்வளவு நாட்களாகக் காத்திருக்கிறேன் தெரியுமா?"

"ஆமாம், காத்திருந்தாய் அல்லவா?" பானோ ரோஷத்துடன் பேசினாள், மேலே அடி எடுத்து வைத்தாள்.

"ஊஹூம், எனக்குப் பதில் சொல்லிவிட்டுப் போ, அண்ணி," அவள் முன்னால் சென்று வழி மறித்தான்.

"விஷயத்தைச் சொல்லு!" பானோ உறுமினாள்.

ஜாகர் மெதுவாகப் பேசினான், "வா, நாம் இருவரும் எங்கே யாவது போய்விடலாம்."

"உனக்குப் புத்தி பேதலித்து விட்டதா ஜாகர்?"

"மீர்ஜாவைச் (மீர்ஜா-ஸாஹிபான்-பாஞ்சாலத்தின் அமர காதலர்கள். ஸாஹிபாவின் சகோதரர்கள் மீர்ஜாவைக் கொன்று விட்டார்கள். அது ஓர் உள்ளத்தை உருக்கும் அவலச்சுவை மிக்க நாட்டுப்பாடலில் விவரிக்கப்பட்டுள்ளது). செய்தது போல்

என்னையும் ஈட்டியால் குதறிப் போடவை. நான் என் முடிவிலிருந்து அசைய மாட்டேன்.

இவனிடமிருந்து எப்படியாவது தப்பவேண்டும் என்று அவள் முடிவு செய்து கொண்டாள். "இப்படி வேடிக்கை செய்யாதே ஜாகர்" அவள் கூறினாள்.

"நான் வேடிக்கையாகவே எதுவும் சொல்லவில்லை அண்ணி, என்னுடைய பாட்டியின் ஊரைச் சேர்ந்த நண்பன் ஒருவன் பம்பாயில் லாரி ஓட்டுகிறான். அங்கே போய்விடுவோம், யாருக்குத் தெரியப் போகிறது?"

"நீ என்னை மட்டமான பெண்ணாக எடை போட்டுவிட்டாய்." துயரம் தோய்ந்த குரலில் அவள் பேசினாள்.

"சாதாரணமான ஒரு பெண்ணுக்கா என்னைப் போன்ற கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த ஒருவன், வீட்டை விட்டு ஓடி வருவானா? நீயே யோசித்துப்பார். உண்மையிலேயே நீ இல்லாமல் என்னால் வாழ முடியாது என்ற நிலை ஏற்பட்டு இருக்கிறது."

"இது நடவாத காரியம். இந்த ஊரிலிருந்து என் உயிரற்ற உடல்தான் இனி வெளியேறும்." அவள் உடைந்த குரலில் கூறினாள்.

"சரி, அதுதான் உன் விருப்பமானால் அப்படியே இருக்கட்டும். ஆனால் என்னை வெறுத்துச் சினங்கொள்ளாதே அண்ணி."

"நான் ஏன் எவர்மேலும் கோபம் கொள்ள வேண்டும் ஜாகர்."

"நீ உத்தரவு கொடு, நான் இப்போதே கிணற்றில் குதிக்கிறேன். அப்படிச் செய்யாவிட்டால், நான் ஒரு வேளாளனின் மகனில்லை. ஈன ஜாதியைச் சேர்ந்தவன்."

"எதற்காக இந்தக் கூத்தெல்லாம்."

"உன் கோபத்தைத் தணிக்கத்தான்."

பானோ பதில் ஏதும் சொல்லவில்லை.

"அப்படி உனக்குக் கோபம் ஏதும் இல்லையென்றால், நான் இன்னொரு விவரம் கேட்கட்டுமா? மீண்டும் உன்னை இப்படித் தனியே சந்திக்க வாய்ப்புக் கிட்டுமோ, கிட்டாதோ?"

"கேளேன்," மேலே, மேலே காலடி எடுத்துவைத்த வண்ணம் நகர்ந்தவாறே கூறினாள் பானோ.

"இப்படியே இந்த உலகத்திலிருந்து போய்விடுவதாக உத்தேசமா?"

அவளால் மறுமொழி ஏதும் தர இயலவில்லை.

அவன் பாஞேவின் கையைத் தன் கரத்துடன் இணைத்து வைத்துக்கொண்டான். "உன் பெயர் சொல்ல ஒரு குழந்தை வேண்டாமா?"

ஜாகரை இறுகப் பிணைத்துக்கொண்டு கதறவேண்டும் போலிருந்தது பாஞேவுக்கு. அவள் தன் கையை விடுவிக்க முயற்சிக்கவில்லை.

"ஒரு குடிகாரனுக்காக உன் வாழ்வைப் பாழாக்கிக் கொள்ளாதே பாஞே. நாளை அவன் இறந்து விட்டால் உனக்கு யார் துணை இருப்பார்." அவளைத் தன்பக்கம் இழுத்தவாறு கூறினன்.

"வேண்டாம், இது தவறு." தன் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள் பாஞே.

ஜாகர் பெருமூச்சு விட்டான். "இதுதான் உன் விருப்பமானுல் அப்படியே இருக்கட்டும். ஆனுல் எப்போதாவது என்னைச் சந்தித்து உரையாடு, அதுபோதும்."

"அப்படியே"- மரத்துப்போன குரலில் பதிலிறுத்தாள் பாஞே.

"சரவணன் மேல் ஆணையாக நாளை நீ இங்கு வருவதாகச் சத்தியம் செய்"- ஜாகர் கூறினன்.

"சரவணனின் மேல்"- ஒரு கணம் யாரோ அவள் மண்டையைத் தாக்கியதுபோல் இருந்தது அவளுக்கு.

"இது நம்மிடையே ஒரு பவித்திரமான உடன்பாடு அண்ணி, உன்னுடைய விருப்பமில்லாமல் நான் உன்மேல் விரலைக்கூட வைக்க மாட்டேன். ஆனுல் நீ என்னைச் சந்திக்கத் தவருமல் வரவேண்டும்."

"சரி," பாஞே அவசரமாகக் கூறி விடுபட்டாள்.

"அப்படியானுல் சத்தியமாக என்று சொல்லு. இல்லாவிட்டால் உன்னை இங்கிருந்து போகவிட மாட்டேன்."

"சத்தியமாக..."

"சரவணனின் மேல் ஆணையாக..."

"ஆமாம்...ஆமாம்." அந்தக் காரிருளில் பாதையை ஒவ்வொரு தப்படியாகக் கடந்து வீடுதிரும்பி நடந்து வரும்போது, அநாவசிய மாகச் சரவணின் மேல் ஆணையிட்டுப் பொய்ச் சத்தியம் செய்ய வேண்டியிருந்ததே என்று அவள் வருந்தினுள்.

பொழுது சாயும் நேரம். வானத்தில் கருமேகங்கள், நிலத்தில் விழும் சிறு, சிறு நீர்த்துளிகளினுல் வெளிப்படும் மண்ணின் இனிய மணம், நனைந்து கொண்டே நகர்ந்துவரும் மாலைப்பொழுது.

பானோ அடுப்பினருகில் அமர்ந்து, ரொட்டி தயாரித்துக் கொண்டிருந்தாள். அடுப்பில் ஈரவரட்டி, சுருள்சுருளாக அலைந்துவரும் காற்று, சில சமயங்களில் எரியும் நெருப்பைத் தூண்டிவிட்டது. ஒவ்வொரு நேரத்தில் அவிக்கவும் செய்தது.

ரொட்டி மாவு உலர்ந்துபோகத் தொடங்கிற்று. "யாராவது விருந்தாளி வருவார்களோ?" பானோ எண்ணத் தொடங்கினாள். ஆனால் இந்த வீட்டிற்கு யார் வரப்போகிறார்கள் என்று அவளே முடிவு செய்து கொண்டாள். அந்த எண்ணம் நினைவில் படர்ந்து கொண்டிருக்கும்போதே, கையில் பிடித்த பையுடன் வீட்டில் ஒரு பெண் நுழைந்தாள்.

வந்தவளின் உடல்வாகு, உயரம் அனைத்தும் அவளுக்கு நாராயணனையே நினைவூட்டின என்றாலும், இவளுடைய முகம் ஒளி பொருந்தியது. வசதியுள்ள குடும்பத்தில் வாழும் பெண்களைப் போல் காணப்பட்டாள். சீட்டித் துணியினாலான ஸல்வார், வெள்ளை லினனில் தயாரிக்கப்பட்ட குர்த்தா, மலர்கள் அச்சடிக்கப் பட்ட வாயில் மேல் துகில்.

பானோவைப் பார்த்து ஒருகணம் ஒன்றும் புரியாமல் அவள் நின்றாள். இரேழியிலேயே [illegible]களைக் கழற்றிவிட்டு, கைப் பையைப் பெட்டியின்மேல் வைத்துவிட்டு அவள் பேசத் துவங்கினாள்.

"புதுப்பெண்ணே நீ எங்கிருந்து வந்தாய். எனக்கு அடையாளம் ஒன்றும் தெரியவில்லையே!"

ஆனால் பானோ புரிந்து கொண்டாள். அது நாராயணனின் அக்கா கர்த்தாரி, என்பது முகஜாடையிலிருந்து தெளிவாயிற்று. "என் பெயர் பானோ." அவள் எழுந்திருந்து வந்தவளின் பாதங்களைத் தொட்டு வணங்கினாள்.

"நீண்ட ஆயுளுடன் நீ சுமங்கலியாய் வாழவேண்டும். இறைவனின் அருளால் உனக்கு எல்லா நலன்களும், புத்திர பாக்கியமும் கிடைக்கவேண்டும். நாராயணன் சுகமாக இருக்கிறானா?"

"இருக்கிறார். அடிக்கடி உங்களைப் பற்றிப் பேசுவார்" பானையில் இருந்து பாலை எடுத்து ஒரு தம்ளரில் வார்த்து அதில் சீனியிட்டுக் கலந்து கர்த்தாரியின் முன்னால் வைத்தாள்.

"இப்போது பாலுக்கு என்ன அவசரம்" என்று கூறிக்கொண்டே அந்தச் சூடான தம்ளரைத் தாவணியின் ஓரத்தில் வைத்துக் கையில் பிடித்துச் சிறிது, சிறிதாக அருந்தத் தொடங்கினாள்.

அவன் பாரேவின் கையைத் தன் கரத்துடன் இணைத்து வைத்துக்கொண்டான். "உன் பெயர் சொல்ல ஒரு குழந்தை வேண்டாமா?"

ஜாகரை இறுகப் பிணைத்துக்கொண்டு கதறவேண்டும் போலிருந்தது பாரேவுக்கு. அவள் தன் கையை விடுவிக்க முயற்சிக்கவில்லை.

"ஒரு குடிகாரனுக்காக உன் வாழ்வைப் பாழாக்கிக் கொள்ளாதே பாரே. நாளை அவன் இறந்து விட்டால் உனக்கு யார் துணை இருப்பார்." அவளைத் தன்பக்கம் இழுத்தவாறு கூறினான்.

"வேண்டாம், இது தவறு," தன் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள் பாரே.

ஜாகர் பெருமூச்சு விட்டான். "இதுதான் உன் விருப்பமானால் அப்படியே இருக்கட்டும். ஆனால் எப்போதாவது என்னைச் சந்தித்து உரையாடு. அதுபோதும்."

"அப்படியே"- மரத்துப்போன குரலில் பதிலிறுத்தாள் பாரே.

"சரவணன் மேல் ஆணையாக நாளை நீ இங்கு வருவதாகச் சத்தியம் செய்"- ஜாகர் கூறினான்.

"சரவணனின் மேல்".. ஒரு கணம் யாரோ அவள் மண்டையைத் தாக்கியதுபோல் இருந்தது அவளுக்கு.

"இது நம்மிடையே ஒரு பவித்திரமான உடன்பாடு அண்ணி, உன்னுடைய விருப்பமில்லாமல் நான் உன்மேல் விரலைக்கூட வைக்க மாட்டேன். ஆனால் நீ என்னைச் சந்திக்கத் தவறாமல் வரவேண்டும்."

"சரி," பாரே அவசரமாகக் கூறி விடுபட்டாள்.

"அப்படியானால் சத்தியமாக என்று சொல்லு. இல்லாவிட்டால் உன்னை இங்கிருந்து போகவிட மாட்டேன்."

"சத்தியமாக..."

"சரவணனின் மேல் ஆணையாக..."

"ஆமாம்...ஆமாம்." அந்தக் காரிருளில் பாதையை ஒவ்வொரு தப்படியாகக் கடந்து வீடுதிரும்பி நடந்து வரும்போது, அநாவசியமாகச் சரவணின் மேல் ஆணையிட்டுப் பொய்ச் சத்தியம் செய்ய வேண்டியிருந்ததே என்று அவள் வருந்தினாள்.

பொழுது சாயும் நேரம். வானத்தில் கருமேகங்கள், நிலத்தில் விழும் சிறு, சிறு நீர்த்துளிகளினால் வெளிப்படும் மண்ணின் இனிய மணம், நனைந்து கொண்டே நகர்ந்துவரும் மாலைப்பொழுது.

பானோ அடுப்பினருகில் அமர்ந்து, ரொட்டி தயாரித்துக் கொண்டிருந்தாள். அடுப்பில் ஈரவரட்டி, சுருள்சுருளாக அலைந்துவரும் காற்று, சில சமயங்களில் எரியும் நெருப்பைத் தூண்டிவிட்டது. ஒவ்வொரு நேரத்தில் அவிக்கவும் செய்தது.

ரொட்டி மாவு உலர்ந்துபோகத் தொடங்கிற்று. "யாராவது விருந்தாளி வருவார்களோ?" பானோ எண்ணத் தொடங்கினாள். ஆனால் இந்த வீட்டிற்கு யார் வரப்போகிறார்கள் என்று அவளே முடிவு செய்து கொண்டாள். அந்த எண்ணம் நினைவில் படர்ந்து கொண்டிருக்கும்போதே, கையில் பிடித்த பையுடன் வீட்டில் ஒரு பெண் நுழைந்தாள்.

வந்தவளின் உடல்வாகு, உயரம் அனைத்தும் அவளுக்கு நாராயணனையே நினைவூட்டின என்றாலும், இவளுடைய முகம் ஒளி பொருந்தியது. வசதியுள்ள குடும்பத்தில் வாழும் பெண்களைப் போல் காணப்பட்டாள். சீட்டித் துணியினாலான ஸல்வார், வெள்ளை லினனில் தயாரிக்கப்பட்ட குர்த்தா, மலர்கள் அச்சடிக்கப் பட்ட வாயில் மேல் துகில்.

பானோவைப் பார்த்து ஒருகணம் ஒன்றும் புரியாமல் அவள் நின்றாள். இரேழியிலேயே காலணிகளைக் கழற்றிவிட்டு, கைப் பையைப் பெட்டியின்மேல் வைத்துவிட்டு அவள் பேசத் துவங்கினாள்.

"புதுப்பெண்ணே நீ எங்கிருந்து வந்தாய். எனக்கு அடையாளம் ஒன்றும் தெரியவில்லையே!"

ஆனால் பானோ புரிந்து கொண்டாள். அது நாராயணனின் அக்கா கர்த்தாரி, என்பது முகஜாடையிலிருந்து தெளிவாயிற்று. "என் பெயர் பானோ." அவள் எழுந்திருந்து வந்தவளின் பாதங்களைத் தொட்டு வணங்கினாள்.

"நீண்ட ஆயுளுடன் நீ சுமங்கலியாய் வாழவேண்டும். இறைவனின் அருளால் உனக்கு எல்லா நலன்களும், புத்திர பாக்கியமும் கிடைக்கவேண்டும். நாராயணன் சுகமாக இருக்கிறானா?"

"இருக்கிறார். அடிக்கடி உங்களைப் பற்றிப் பேசுவார்" பானையில் இருந்து பாலை எடுத்து ஒரு தம்ளரில் வார்த்து அதில் சீனியிட்டுக் கலந்து கர்த்தாரியின் முன்னால் வைத்தாள்.

"இப்போது பாலுக்கு என்ன அவசரம்" என்று கூறிக்கொண்டே அந்தச் சூடான தம்ளரைத் தாவணியின் ஓரத்தில் வைத்துக் கையில் பிடித்துச் சிறிது, சிறிதாக அருந்தத் தொடங்கினாள்.

"நான் உத்திரப் பிரதேசத்துக்குப் போனாலும் போனேன், அக்கா, தம்பி உறவே அற்றுப் போய்விட்டது. இந்த நாராயணன் ஒரு சோம்பேறி. ஒரு தபால் கார்டு கூட எழுத மாட்டான். நானும் பல நாட்களாக இங்கே வரவேண்டுமென்று நினைத்துக் கொண்டிருக்கிறேன். வீட்டில் உள்ள பொறுப்புக்கள், வெளியில் கிளம்ப முடியாமல் செய்து விட்டன."

பானு உருளைக்கிழங்கை எடுத்துச் சீவத் தொடங்கினாள். "நீங்கள் இங்கே புறப்பட்டு வந்தது மிகவும் நல்ல காரியம்." அவள் மகிழ்ச்சியுடன் கூறினாள்.

"விஷயம் தெரியுமா பானு, நம் வீட்டில் ஒரு சுபகாரியம் நிகழ இருக்கிறது. தம்முடைய சொந்த ஊரிலேயே அதை நடத்தலாம் என்று என் கணவர் சொன்னார். எனக்கு அந்த யோசனை பிடிக்க வில்லை. எப்படி இருந்தாலும் நம்முடைய ஊர், நமது மனிதர்கள், அவர்களுடைய உறவும் சகவாசமும் விட்டுப் போகக் கூடாது என்பது என் கருத்து."

"இதைக் கேட்க மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. ஒருவருக் கொருவர் உதவுவதற்காகத் தானே உடன் பிறந்தவர்கள் இருக்கிறார்கள்." உருளைக் கிழங்கை நறுக்கியவாறே பேசினாள் பானு.

சமையலறையில் சாமான்கள் வைக்கப்பட்டிருக்கும் நேர்த்தி கர்த்தாரியை மிகவும் கவர்ந்தது. "வீட்டு வேலைகளை மிகவும் பாங்காய்ச் செய்வாய் போலிருக்கிறதே."

பானு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"உன் பிறந்த வீடு எங்கே?"

"படிகே கோட்லே"- ஈன சுரத்தில் பதிலிறுத்தாள் பானு.

"நம்முடைய இச்சைப்படி என்ன நடக்கிறது. எல்லாம் அவன் கையில்" அவளுடைய மன ஓட்டத்தைப் புரிந்து கொண்டவள் போல் கர்த்தாரி பேசினாள்.

தரையில் உட்கார்ந்து சர்க்கரையைச் சலித்துத் துப்புரவு செய்யும் பணியில் முனைந்தாள் பானு.

"எனக்குத் தித்திப்பு பிடிக்காது என்று எண்ணிக் கொள்ளாதே பானு." நமட்டுச் சிரிப்புடன் கூறினாள் கர்த்தாரி.

"இதோ" அவள் கிண்ணத்தில் சர்க்கரையை நிரப்பினாள். "இந்தச் சாக்கில் நானும் கொஞ்சம் ருசி பார்க்கிறேன்."

"நீ இங்கிருப்பது தெரிந்திருந்தால், ஏதாவது துணிமணிகளாவது வாங்கி வந்திருப்பேன்."

"நீங்கள் சொல்லுவது வேடிக்கைதான். வீட்டில் பிறந்த பெண்களுக்குக் கொடுப்பார்களா, அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்வார்களா?"

"ஆயுள் முழுவதும் அவர்களுக்குக் கொடுத்துக் கொண்டே இருக்கிறோம். எப்போதாவது அவர்களிடமிருந்து பெற்றுக் கொள்ளவும் வேண்டுமல்லவா?"

"அதற்கென்ன நிறையச் சந்தர்ப்பங்கள் கிடைக்கும்" பேசிக் கொண்டே ரொட்டி மாவு பிசையத் தொடங்கினாள் பானு.

எப்படியோ, 'என் தம்பியின் வீடும் நிறைந்ததல்லவா' என்று எண்ணத் தொடங்கினாள் கர்த்தாரி. அவளுடைய வரவு பானுவின் உள்ளத்திலும் மகிழ்ச்சியை நிறைத்தது.

கதவைத் திறந்ததும், உள்ளே சகோதரி உட்கார்ந்திருப்பதைக் கண்டு மகிழ்ந்தான் நாராயணன். "வணங்குகிறேன் அக்கா" அவளுடைய பாதத் தூளியைத் தரித்துக் கொண்டான்.

"நீ நன்றாக வாழவேண்டும் தம்பி, உன் வீடு நிறைய வேண்டும். நீதான் என் வீட்டுப் பக்கம் வரவே மாட்டேனென்கிறாய், அதனால் நானே வந்துவிட்டேன்."

"உன் வீட்டிற்கு வருவதற்குள் இளைஞன் கிழவனாகிவிடுவான். எங்கேயோ கண்ணுக்கெட்டாத தேசத்தில் வசிக்கிறாயே!" நாராயணன் வேடிக்கையாகப் பேசினான்.

"என்னவோ, அதிசயமாகப் பேசுகிறாயே. ஒவ்வொரு தம்பி தன் சகோதரியைச் சந்திக்க மலைமுகடேறி வருகிறான். உத்தரப் பிரதேசம் வெகு தூரமா?"

"என்மேல் தவறுதான் அக்கா. இனி அவசியம் வருகிறேன்."

நாராயணன் திணறுவதைக்கண்டு பானு பேச்சில் குறுக்கிட்டாள். "நமக்கும் இத்தகைய கௌரவமான உறவு இருக்கிறது என்று உலகத்திற்குத் தெரிய வேண்டாமா, நாம் இனி அங்கு போகலாம்."

"கர்த்தாரிக்குத் தேனீரோ, மற்றதோ கொடுத்தாயா?"

"ஊஹூம். எல்லாம் உங்கள் தம்பியே தயாரித்துக்கொடுப்பார் என்று கூறிவிட்டேன்."

"வீட்டிற்கு முக்கியமானவள் நீ தானே. தம்பி என்ன செய்வான். அவனும் உன் தயவுக்காகக் கை ஏந்தி நிற்கிறான்." கட்டிலைக் கர்த்தாரியின் அருகே இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தான் நாராயணன்.

"உடம்புக்கு ஒன்றுமில்லாமல் இருக்கிறாயா நாராயணா?

"ஓ, நீதான் பார்க்கிறாயே. குழந்தைகள் நலமா?"

"இறைவனின் அருளால் எல்லாம் சரிவர நடக்கின்றன. மகள் பீபோவுக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருக்கிறது. எல்லாம் ஹரியேயின் ஏற்பாடு. மணமகன் பட்டாளத்தில் பணி புரிகிறான். நல்ல குடும்பம். கல்யாணத்தை நீதான் நடத்திக்கொடுக்க வேண்டும். இந்த வீட்டில்தான் அது நடக்க வேண்டும். இன்னும் நாற்பது நாள்தான் இருக்கிறது முகூர்த்தத்திற்கு" எல்லாவற்றையும் ஒரே மூச்சில் கூறி முடித்தாள் கர்த்தாரி.

"ஓ, மிக நல்ல செய்தி. அப்படியானால் எனக்கும் தின்பதற்கு நிறைய லட்டு கிடைக்குமல்லவா?"

"என் கணவர் திருமணத்திற்குப் பத்து நாள் முன்னால்தான் வருவார். அதனால் நான் முன்னால்போய் ஏற்பாடுகளைச் செய்யலாம் என்று வந்தேன். அதிக நாட்கள் வீட்டைவிட்டு வரவும் முடியவில்லை."

... இந்த நாற்பது நாட்களும் பானோவுக்குக் கண்ணிமைப்பதைப் போல் கழிந்து விட்டன. அவள் பம்பரமாகச் சுழன்றாள். கடைத் தெருவுக்கு ஓடித் துணிமணிகளைத் தேர்ந்தெடுத்தாள். மாவரைக்க, பருப்பு சுத்தம் செய்ய, வீட்டை மெழுக ஒக்கிட, மண் குழைக்க என்று நேரம் போவதே தெரியாமல் பணிபுரிந்தாள். உண்மையைச் சொல்லப்போனால் அரித்த தலையைச் சொரிந்து கொள்ளக்கூட அவளுக்கு நேரமில்லை. கர்த்தாரி அவளைப் பாராட்டிய வண்ணமிருந்தாள். "அண்ணி, நீ இல்லாவிட்டால் நான் திணறிப் போயிருப்பேன். என்னால் என்ன செய்ய முடியும்?"

வேலைசெய்ய பானோ சளைக்கவே இல்லை. எல்லோருக்கும் கடைசியில் உறங்கப் போவாள். முதலில் கண்விழிப்பாள். நாள் முழுவதும் ஏதாவது உழைத்த வண்ணமிருந்தாள். கால் தரையில் பாவிற்றே தவிர, மண்டையில் துளிக்கூடக் கர்வமில்லை.

விருந்தாளிகள், மாப்பிள்ளை அழைப்பு, ஊர்வலம் எவ்வளவோ பணிகள். புத்தாடை அணிந்து சுழன்று சுழன்று எல்லா வேலைகளுக்கும் பானோ ஈடுகொடுத்தாள்.

மணப் பெண்ணுடன் பிள்ளைவீட்டார் மகிழ்ச்சியுடன் திரும்பிப் போனார்கள். கர்த்தாரி அண்ணி பானோவை உளமாறப் புகழ்ந்தாள்.

மணமகளை வழியனுப்பிய பிறகு, பெண்கள் ஆடியும் பாடியும் மனமகிழ்ந்தார்கள். கூட்டத்தில் ஒருத்தி, வலுக்கட்டாயமாக பானோவைக் கூட்டத்தின் நடுவில் நிறுத்தி வைத்தாள்.

மிகவும் களைத்துப் போயிருந்த அந்த நிலையிலும், பாஞேவின் உடலில் இத்தனை ஆற்றல் எப்படி ஒளிந்திருந்ததோ தெரியவில்லை. அவள் ஆடிய ஆட்டத்தில் நிலமே நெகிழ்ந்து போயிற்று – எத்தனை எத்தனை பாடல்கள் ஒரு முடிவே இராதுபோல் தோன்றிற்று. அவளுடைய குரலினிமை கேட்டவர்களைக் குழைய வைத்தது.

திருமண வைபவத்தில் பாஞே பாடிய வேடிக்கைப் பாடல்...

எந்தையே வேண்டாம் திருமணம் எனக்கு,
இருப்பேன் இந்த வீட்டிலே
இருப்பேன் இந்த வீட்டிலே
எல்லா வேலையும் செய்வேன்.
எனக்கு வரப்போகும் மாமனுர்
ஏழுநூறு வெட்டுக்கிளி வளர்க்கிறுர்.
வெட்டுக்கிளி ஒன்றிறந்தால்,
எட்டு நூறு நட்டமாகும்,
வெட்டுக்கிளி குட்டிபோட்டால்,
பிள்ளை குட்டி பிழைத்துப் போகும்
வெட்டுக்கிளி பாலில் வெண்ணெய் எடுப்பேன்
வேண்டிய வருவார், மோர், காவலர்-சபாஷ்

'என்னுடைய அண்ணியைப் பேழையில் வைத்துப் பாதுகாக்க வேண்டும்'- உள்ளம் நிறைய அவளைப் பாராட்டிளுள் கர்த்தாரி. எல்லா விருந்தாளிகளும் சென்ற பிறகு கர்த்தாரியும், அவள் குடும்பமும் புறப்பட ஆயத்தமாயினர். கர்த்தாரி பாஞேவை நெஞ்சாரத் தழுவிக் கொண்டு கூறிஞள் : "நீ அவசியம் எங்கள் வீட்டிற்கு வரவேண்டும்."

பாஞே அவளுடைய காலைத் தொட்டு வணங்கிஞள். "கட்டாயம் வருகிறேம். எங்களுக்கும்தான் வேறு உறவுக்காரர்கள் யார் இருக்கிறுர்கள்?"

"நாராயணன் உன்னேடு சண்டை போடுகிறுஞ? நல்ல சுபாவம் அவனுக்கு, இருதயம் நல்லதுதான், பேச்சு மட்டும் கடுமையாக இருக்கும்."

"இவளோடு சண்டை போட்டு நான் தப்பிக்க முடியுமா அக்கா," அவன் வேடிக்கையாகக் கேட்டான்.

"நல்லது அக்கா, பிழைத்துக் கிடந்தால் நாங்கள் இருவரும் உங்களை வந்து சந்திக்கிறேம்."

"என் மனுஷ்யர்கள் என்று எனக்கும்தான் யாராவது வேண்டு மல்லவா? நீங்கள் அவசியம் வரவேண்டும்." கர்த்தாரி விடைபெற்றுள்.

ஊர் எல்லையிலிருந்த ஓடைவரையில் சென்று கர்த்தாரியை மீண்டும் வணங்கி வழி அனுப்பினாள் பானு. "நாங்கள் உங்களை வந்து பார்க்கிறோம்" என்று உறுதி கூறினாள். அவர்கள் ஏறிச் சென்ற வண்டி, விரைந்த பாதையையே பார்த்துக் கண்கலங்கி நின்றாள் பானு. ஸ்டேஷனுக்குச் சென்று வழி அனுப்பினான் நாராயணன்.

கர்த்தாரியும், அவளுடைய குடும்பமும் விடைபெற்றுச் சென்றபிறகு பானுவுக்கு வீடு திரும்பவே மனமில்லை. வெறிச் சோடிப் போயிருந்த அந்த இல்லம், அவளை விரட்டி அடித்தது. அவள் ஸந்தியின் வீட்டை நோக்கிச் சென்றாள். ஸந்தி அவளை வரவேற்றாள். கர்த்தாரியை அவள் வழி அனுப்புவதைப் பார்த்துக் கொண்டே இருந்தாள். "கர்த்தாரி ஊருக்குப் போய் விட்டாளா?" அவள் கேட்டாள்.

"ஆமாம் அம்மா, ஒரு நாள் அவள், தன் வீட்டிற்குப் போக வேண்டியவள் தானே."

"வெறும், வெளி உபசாரத்திற்காக இதை நான் சொல்லவில்லை. உன் திறமையைப் பாராட்டாமல் இருக்க முடியாது. இத்தனை பெரிய சுபகாரியத்தை ஒரு குறைவுமில்லாமல், இவ்வளவு அழகாகச் செய்திருக்கிறாயே. நீ இல்லாமல், இந்தக் குடிகாரக் கூட்டத்தால் ஒன்றுமே செய்ய முடியாது."

"எல்லாவற்றையும் முடித்துக் கொடுப்பது இறைவனின் செயல். மனிதப் பிரயத்தனத்தினால் என்ன ஆகி விடும்?"

"பகவானும் மனிதர்கள் மூலமாகத்தானே எதையும் நிறைவேற்ற இயலும், தானே இயங்க முடியுமா?"

"பெண்களின் இயல்பைப் பார்த்தீர்களா அம்மா. நிமிஷ நேரத்தில் இன்னொரு வீட்டைச் சேர்ந்தவர்களாகி விடுகிறார்கள்."

"அதுதான் உலகத்தின் நியதி பானு?"

"என் திருமணம் முடிந்த பிறகு நான் அழத்தொடங்கினேனா, அதைப் பார்த்துச் சரவணனும் அழுதாராம். அதை எங்கள் வீட்டில் சொல்லிக்காட்டிக் கேலி செய்வார்கள்."

"நீ ஏன் மீண்டும், மீண்டும் மரித்தவர்களை எண்ணி மறுகுகிறாய்? நான் உனக்குப் பலமுறை சொல்லி இருக்கிறேன் அல்லவா?"

"நீங்கள் சொல்வது மிகவும் நியாயம் அம்மா. ஆனால் என்னால் அவைகளை மறக்கவே முடியவில்லையே!"

"இந்தத் தடவை பஞ்சமித் திருவிழாவுக்குப் பாட்டியாலா போகலாம். ஐந்து பஞ்சமி அங்கு சென்றுவந்தால் வேண்டிய தெல்லாம் கிடைக்குமாம்."

"நான் என்ன வேண்டுதல் செய்துகொள்ள வேண்டும் அம்மா" பானே தணிந்த குரலில் வினவினுள்.

ஸந்தி மக்காச் சோளக் கதிர்களைப் பானையிலிருந்து எடுத்து உதிர்ப்பதற்காக மூட்டையில் இட்டாள். அதில் ஒன்றை எடுத்து இரண்டாக ஒடித்தாள் பானே.

"ஏன், அடுத்த ஆண்டு மீண்டும் வரும்போது, எனக்கு ஒரு குழந்தையைக் கொடு என்று வேண்டிக் கொள்ளேன். ஏதாவது மருத்துவச்சியைக் கலந்து கொண்டாயா பானே!" ஸந்தி கேட்டாள்.

"என்னுடைய ஜன்மத்திற்கு ஒரு பொருளும் இல்லையம்மா"

"எல்லாம் அவரவர்களுடைய தலைவிதி. எதை விதைக்கிறேமோ, அதுதான் விளையும். தாய், தந்தையர் நம் பிறப்புக்குத்தான் பொறுப்பாளி, விளைவுகளுக்கு அல்ல."

"நான் எப்போதாவது அந்தக் கடவுளை நேரில் பார்க்க நேரிட்டால் நிச்சயம் கேட்பேன், நான் என்ன வறுத்த விதையையா தெளித்தேன்."

"யாராவது இதுவரை பகவானைச் சந்தித்ததுண்டா. அவருடைய ரகசியங்களை அறிந்தவர்கள் யார்?"

"எல்லாம் மனதைத் திருப்திப்படுத்திக் கொள்வதற்கு ஓர் உபாயம். நம்முடைய இச்சைப்படி நியாயமாக நடந்தால் போதும்."

"பானே, உடனடியாக ஒன்றும் வேலை இல்லையே? என் தலையைக் கொஞ்சம் பாரேன். ஒரேடியாக அரித்துப் பிடுங்குகிறது. பேன் ஏதாவது இருக்கும் என்று நினைத்தேன்." வசனி தன் ஈரத்தலையை விரித்துப் போட்டுக் கொண்டு அவள் முன்பு உட்கார்ந்தாள்.

கொண்டையிலிருந்து உதிர்ந்த முத்துக்களைத் தாலத்தில் போட்டுவிட்டுக் கையைத் தட்டி உதறிக் கொண்டு வசனியின் தலையைப் பார்க்கத் துவங்கினுள்.

ஸந்தி எதிரே உட்கார்ந்து கொண்டு, சோள முத்துக்களை உதிர்த்தாள்.

"உன்னுடைய தலையில் ஒன்றுமில்லையே!" அளைந்து பார்த்த பிறகு பானே கூறினுள்.

"நல்லது, இப்போது சந்தேகம் தீர்ந்துவிட்டது." என்று கூறிவிட்டு, ஸந்தியின் பக்கம் பார்த்தவாறே வீடு திரும்பினுள்.

வசனி அகன்ற பிறகு, தலையில் அடித்துக் கொண்டாள் ஸந்தி. "இவளுக்குப் போய் ஏன் உதவி செய்கிறுய்?" அவள் நொந்து கொண்டாள்.

"அதில் என்ன குறைந்து போகிறேன் அம்மா?"

"அவள் மந்திரவாதிகளை நாடிக் கயிறும், தாயத்தும் தயாரித்துக் கொண்டிருக்கிறுள். கொஞ்ச நாள் முன்பு ஏழு மாதக் குழந்தை ஒன்று மரித்துவிட்டதல்லவா?"

"எனக்கு ஒன்றும் வராது." தன் பிசுக்குக் கையை மண்ணில் தேய்த்தவாறே கூறிஞள் பாஞே.

"நிறையப் பார்த்துவிட்டேன் அம்மா. இனி, கடவுளின் பொன்னடிகளை அடைந்தால் போதுமானது."

"ஏ, அப்பா, இரண்டு கல் நடப்பதற்குள், ஐயா மீண்டும் தாகம் என்ருளாம் ஒருத்தி. அதைப் போலத்தான் இருக்கிறது உன் கூற்று."

"உண்மையாகச் சொல்லுகிறேன் தாயே, எனக்கென்னவோ பயணத்தின் இறுதிக்கு வந்துவிட்டாற் போலவும், நடப்பதற்கு ஓராண்டுகல் தொலைவே இருப்பது போலவுமே தோன்றுகிறது."

"ஒவ்வொரு சமயம் இப்படி மனம் பொங்கித்தான் போகிறது. நீ சொல்லுவதும் உண்மைதான். ஒரே பக்கமாக வாட்டிஞல் ரொட்டி கருகித்தானே போகும்."

"டோகர் உயிருடன் இருந்தால் எனக்குக் கவலை ஏதும் இல்லை. ஒவ்வொரு சமயம் என் தகப்பஞர் எதிரே வந்து நிற்பது போலவே இருக்கிறது. என் எதிரே நின்று நீயும் என்னைவிட்டுப் போய் விட்டாயே என்று கேட்பதைப்போல் ஒரு பிரமை. 'எங்கெல்லாம் சென்று மோதி இடிபடுகிருயோ' என்று அவர் கேட்கிருர்."

"எல்லாம் எழுதியபடிதான் நடக்கும். குழந்தைகளிஞல் அவனுக்குச் சுகம் இல்லை என்று அவனுடைய விதி. யாரால் அதைத் திருத்த முடியும்?"

"பக்கத்திலிருந்தால் தாகத்துக்காவது தண்ணீர் கொடுப்பேன். இப்போது அவர் இருக்கிருரா இல்லையா என்ற செய்திகூடச் சொல்லுவார் யாருமில்லை." அவளுடைய விழிகளில் நீர் சுரந்தது.

"இப்படி ஓய்ந்து போகாதே பாஞே. பரிகாரி ஜேட்டுவிடம் சொல்லிவைக்கிறேன். ஊர்ப்பக்கம் போகும்போது உன் தகப்பனைப் பற்றித் தகவல் கொண்டு தருவான்."

"நொந்த புண்ணை ஏன் கிளறுகிருய் அம்மா. அவரைப் பொறுத்த வரையில் நான் மரித்து மண்மூடிப் போனவள்தானே."

"பாஞே, என்னைப்போல் நீயும், துயரத்திலேயே மூழ்கிப் போயிருக்கிருய்."

"எல்லாம் அவரவர்கள் தலை எழுத்து."

"அந்த மாதிரித்தான் சமாதானம் செய்து கொள்ள வேண்டியிருக்கிறது. உன்னை அப்பழுக்கு எதுவுமே இல்லாமல் படைத்திருக்கிறான். நிறையப் புத்திச்சாலித்தனத்தையும் அருளி இருக்கிறான். உன்னுடைய திறமைக்கு நிகர் யார்? ஆனால் கடைசியில் எழுதும் போது மட்டும் கோணலாக வரைந்து விட்டான்."

"எல்லாம் எனக்கு எழுதப்படிக்கத் தெரியாததன் விளைவு. தெரிந்திருந்தால் கையைப் பிடித்து நிறுத்தி அவனையே கேட்டிருப்பேன். ஏனய்யா? நான் என்ன உன் வயலில் நுழைந்தேனா?"

"நீ தவறாக எண்ணிக் கொள்ளாவிட்டால், உனக்கு ஒரு விவரம் தெரிவிக்க விரும்புகிறேன் பானோ. அதைக் கேட்டதிலிருந்து வயிற்றில் தீப்பிடித்துக் கொண்டாற்போல் இருக்கிறது. உன்னிடம் சொல்ல வேண்டாம் என்றுதான் இருந்தேன். ஆனால் இயலாது என்று தோன்றுகிறது." காய்ந்த சாணி உருண்டைகளை அடுப்பில் எரிந்தவாறு கூறினாள் ஏந்தி.

தன் செவிப்புலன்களைத் தீவிரமாக்கிக் கொண்டு, கூர்ந்து கேட்கத் தொடங்கினாள் பானோ.

"உன் நாத்தனார் மகளின் விவாகத்திற்கு, அந்த நாசமாய்ப் போகிற ஹரியா வந்தானல்லவா, அவன் கர்த்தாரியின் கணவனின் உடன்பிறந்தவன். அவனுக்கு ஒரு மைத்துனி இருக்கிறாள். அவள் கணவனுடன் சென்று வாழவில்லை. இவர்களெல்லாம் பிறர்மேல் குற்றம் சொல்லுவார்கள். தங்கள் தவறை வெளிக்காட்ட மாட்டார்கள். அந்தப் பெண் அவ்வளவு நல்லவள் இல்லையென்று கேள்வி. அவளுடைய விவாகத்திற்கு ஏழே மாதத்திற்குப் பிறகு, அவளுக்கு முழுமையான குழந்தை ஒன்று பிறந்ததாம். அவர்கள் வீட்டைச் சேர்ந்தவர்கள் சும்மா இருப்பார்களா? விஷயத்தைத் தெரிந்துகொண்டு விட்டார்கள். அந்த ஆண் குழந்தை இரண்டு மாதத்திற்குப் பிறகு இறந்தும் போய்விட்டது. என்றாலும் கணவன் வீட்டார் அவளை வரவிடவில்லை. அந்தக் குடியைக் கெடுக்கிற ஹரியா, உன் நாராயணனுடன் ஏதோ பேச்சுவார்த்தைகளை முடித்துக் கொண்டுதான் போயிருக்கிறான் என்று கேள்வி. பானோ வந்து வருஷம் இரண்டாகி விட்டது. குழந்தை உண்டாவதாக இருந்தால் இதற்குள் அவளுக்குப் பிறந்திருக்கவேண்டுமே என்று அவன் கூறினானாம். அறுநூறு ரூபாயில் வார்த்தை திகைந்திருக்கிறதாம்.

"நீ வீட்டை நிர்வகித்துக் கொழிக்க வைத்திருக்கும் வரிசை அவன் கண்ணை உறுத்தியிருக்கிறது. குத்தகைக்காரர்கள் முன்பெல்லாம் நாராயணனுக்குப் பத்து மணங்கு தானியம் கூடத் தர மாட்டான். நீ சிரத்தை எடுத்துக் கொண்டு பாடுபடுகிறாய். வீடு முழுவதும் கோதுமை நிரம்பிவழிகிறது. நீ வந்தபிறகு நாராயணன் மனிதனாக மாறி இருக்கிறான். முன்பெல்லாம் அவன் சதா குடித்துவிட்டு உறங்குவான். கண்ணைக்கூடத் திறக்கமாட்டேன்."

சக்கரத்தில் சுழற்றப்பட்டவளைப்போல் மனம் உளைத்தவளாய், ஸந்தியின் முகத்தை நோக்கினாள் பானோ. ஏதோ நினைவு வந்தவளைப்போல் எழுந்து நின்றாள்.

"தயவுசெய்து நான் இதைச் சொன்னதாக எவரிடமும் தெரிவிக்காதே. நாராயணன் என் தலைமயிரைப் பிடித்து சண்டைக் கிழுப்பான். உன்னுடைய ஓரகத்தி என்னுடன் தகராறு செய்வாள். ஏனோ என்னால் உன்னிடம் சொல்லாமல் இருக்க முடியவில்லை."

பானோ தன் வீட்டின் பக்கம் நடக்கத் துவங்கினாள்.

அவள் தன் வீட்டினுள் சென்று, கொசுவம் வைத்த பாவாடையை அவிழ்த்துக் கொடியில் போட்டாள். பானையிலிருந்து தண்ணீர் குடிக்க முயன்றாள். அது காலியாகக் கிடந்தது.

நாட்கள் மாறுதல் ஏதுமின்றி நகர்ந்தன.

ஆதவனின் பொற்கதிர் பூமியைத் தொட்டது. புள்ளினங்கள் ஆர்த்தன. மஞ்சு புகையாக மாறத்தொடங்கிற்று. தயிர்ப்பானைகள் ஒலிக்கத் தொடங்கின. இரண்டு, மூன்றுமுறை எருமைகள் குரல் கொடுக்கவே நாராயணன் விழித்துக் கொண்டான்.

விடிவிளக்கைக் காணோம். தேனீருக்காக அடுப்பு மூட்டப் படவில்லை. மாடுகள் கறக்கப்படவில்லை. அதனால்தான் அவை குரல் கொடுத்தன. பானோ கண்விழிக்காமல் படுத்திருந்தாள்.

இதற்கு முன்னால் இப்படி நிகழ்ந்ததே இல்லை.

திருமணக் காரியங்களில் தொடர்ந்து வேலை செய்ததால், அவள் களைத்துப் போயிருக்க வேண்டுமென்று நாராயணன் எண்ணினான்.

"பானோ, எழுந்திரு, பொழுது விடிந்துவிட்டது" அவளுடைய கையைப்பற்றி உலுக்கியவாறே கூறினான்.

திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தாள் பானோ. பிறகு அவசர அவசரமாக விளக்கை ஏற்றினாள். தேனீர் தயாரிக்க அடுப்பைப் பற்றவைத்தாள். தயிர்கடைய உட்கார்ந்தாள். நான்கைந்து முறை கயிற்றை இழுத்த பிறகு, "இன்று என் கைகளில் ஏனோ வலுவே இல்லை. கொஞ்சம் தயிரைக் கடைந்து விடுகிறீர்களா?" அவள் கேட்டாள்.

"கைகளில் என்ன கோளாறு. விவாக சமயத்தில் கொஞ்ச வேலையா செய்திருக்கிறாய்? நீ முதலில் தேனீருக்கு ஏற்பாடு செய். நான் கைகால் முகம் கழுவியபிறகு, கயிறை இழுத்துப் பார்க்கிறேன்."

பாரூே எழுந்திருந்து, மாடு கறக்கத் துவங்கினாள். எருமை பல தடவை தன் முகத்தைப் பாரூேவின் பக்கம் திருப்பிப் பார்த்தது. எப்போதும் அதன் முகத்தில் அவள் சிறிது பாலைப் பீய்ச்சுவாள். இன்று அவளுக்கு அது நினைவே இல்லை. கோபம் வந்து காலைத் தூக்கி உதைத்தது. வாளி கீழே சாய்ந்து பாலெல்லாம் தரையில் பரவிற்று. தலை சுற்றிய நிலையில் பாரூே எழுந்திருத்து நின்றாள்.

"உன் கண் இருளடைந்து போச்சா. எல்லாப் பாலும் கொட்டிப் போய்விட்டதே." கட்டிலிலிருந்து கேட்டான் நாராயணன்.

குற்ற உணர்வுடன் பாரூே அடுப்பண்டையில் வந்து கொதித்துக்கொண்டிருந்த தண்ணீரில் வெல்லத்தையும், தேயிலையையும் இட்டாள்.

துணி துவைக்கும் கட்டையை எடுத்து, எருமையின் கால்களில் தன் பலம் கொண்ட மட்டும் அடித்தான் நாராயணன்

ஏனோ, பாரூேவின் உடல் வலுவிழந்து கிடந்தது. அவளால் நகரக்கூட முடியவில்லை. அன்று நாராயணன் பால் இல்லாமல் வெறும் தேனீரை மட்டும் அருந்தினான்.

நொந்த உடலுடன் அன்று முழுவதும், வீட்டு வேலைகளைச் செய்து முடித்தாள் பாரூே. பிறகு நாராயணின் தாயாருடைய பெட்டியைத் திறந்து, அதன் முன்பு உட்கார்ந்து கொண்டாள். பெட்டியினுள் இரண்டு பூப்போட்ட கதர்ச் சால்வை. வெள்ளையும், நீலமும் கலந்து நெய்த ஜமக்காளம். இரண்டு குர்த்தாக்கள், தாவணிகள், ஒரு பழைய கொசுவம் வைத்த பாவாடை. வீட்டிலேயே பின்னிய நாடாக்கள். அவற்றின் நிறம் மங்கிப் போயிருந்தது. போர்த்திக் கொள்ளும் கம்பளி, வெள்ளியில் செய்த தாயத்தொன்றை சீட்டித்துணியில் வைத்திருந்தது. ஒரு சிப்பி, கருகமணி, புலி நகம்– ஒரு குழந்தையின் கழுத்தில் அணிவிக்கக் கூடிய வகையில் எல்லாம் வைக்கப்பட்டிருந்தன.

பெட்டியிலிருந்து வெளியே எடுத்த சாமான்களை எல்லாம், வெகு நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள் பாரூே. பிறகு எந்த முறையில் அவற்றை வெளியில் எடுத்தாளோ, அதே வகையில் மீண்டும் அடுக்கிவைத்தாள். மீண்டும் அதைப்பூட்டி மற்ற சில பழைய பொருள்கள் கிடந்த குடுவையிலேயே அதன் சாவியை

வைத்தாள். அதற்குள் இன்னும் ஓரிரண்டு திறவுகோல்கள் கிடந்தன.

வெளியிலே தள்ளுவண்டிக்காரி குரல் கொடுத்தாள்- "ஸ்வெட்டர் ஊசி, சட்டுவம், சல்லடை, ஜாரணி!"

பாஞேவின் வீட்டுவழியாக நடந்த ஸந்தி அழைத்தாள்: "வா, இங்கே வா பெண்ணே!"

"பாஞே வீட்டிற்குள் தானிருக்கிருயா?" வெளி முற்றத்தில் வந்து அவள் உரக்கப் பேசினுள். "ஆமாம், அம்மா, உள்ளே வாருங்கள்." பாஞே அவளுக்காகக் கட்டிலே இழுத்துப் போட்டாள்.

சாமான் விற்பவள் உள்ளே நுழைந்து வந்தாள். கணுக்கால் வரை தொங்கும் பாவாடை தரித்திருந்தாள் அவள். கைகளில் வெள்ளி வளேகள், பூப்போட்ட தாவணி ஆகியவற்றுடன் தலேயில் ஒரு கூடையைச் சுமந்து வந்தாள். காலணிகூட அணிந்திருக்க வில்லே. கையில் ஒரு ஜாரணி, திருப்பி ஆகியவை இருந்தன.

"தோசை திருப்பி என்ன விலே?" ஸந்தி வினவினுள்.

"இரண்டுசேர் கோதுமை, வேறென்ன தாயே? மணங்கு தானியமா கேட்கப் போகிறேன்?" அவள் தலேக்கூடையைக் கீழே வைத்தாள். தான் கொண்டு வந்திருந்த கருவிகளே ஸந்தியிடம் காட்டினுள்.

"இரண்டுசேர் ஏன், ஐந்துசேர் கேட்கக் கூடாதா? கொள்ளே யடிக்கப் பார்க்கிறாயே! கோதுமை என்ன விலே விற்கிறது தெரியுமா, இப்போது?"

"கால்சேர் குறைத்துக் கொடுத்தாலும், வாங்கிக் கொள்ளுகிறேன் அம்மா" அவள் கூறினுள்.

"நான் ஒருசேர் கோதுமைதான் கொடுப்பேன். இஷ்டமானுல் தா, இல்லே என்ருல் எடுத்துக் கொண்டு போ." அவள் அதை வண்டிக்காரியின் பக்கம் தள்ளினுள்.

"உனக்கும் வேண்டாம், எனக்கும் வேண்டாம், ஒண்ணரைச்சேர் கொடுங்கள்."

"முடியாது ஒரு சேர்தான் தருவேன்."

"சரி போகட்டும் ஒன்றேகால் சேர் கொடுங்கள்." வண்டிக்காரி திருப்பியை ஸந்தியின் கரங்களில் வைத்தாள்.

"நான் ஒரே பேச்சுத்தான் சொல்லுவேன். ஒருசேர் கோதுமை. உனக்கு இஷ்டமில்லாவிட்டால் போய்விடு. இன்னும் எவ்வளவோ பேர்வருவார்கள்."

"சரி வைத்துக் கொள்ளுங்கள். ஒரு ரொட்டியாவது உண்ணக் கிடைக்குமா?"

"அது சரி, கூடக் குடிப்பதற்கு மோரும் தருகிறேன்." திருப்பியை வாங்கிக் கொண்டு தன் வீட்டின் பக்கம் நகர்ந்தாள் ஸந்தி.

"நீங்களும் ஜாரணி, சிமிட்டா ஏதாவது வாங்கிக் கொள்ளுங்கள் அம்மா!" கூடையைத் தூக்கியவாறு பாஞேவிடம் அவள் கூறிஞள்.

"அடுத்த தடவை நீ இங்கு வரும்போது வாங்குகிறேன்" சிரித்தவாறு பதிலிறுத்தாள் பாஞே.

"அடுத்த தடவையில் யார் இருப்பார்கள், இருக்கமாட்டார்கள் என்று ஆண்டவனுக்குத்தான் தெரியும். இப்போதே நீங்கள் வாங்கிக் கொண்டு விடுங்கள்."

"வேண்டாம் சகோதரி, எனக்கு ஒன்றும் வேண்டாம்." நிலத்தில் கையை ஊன்றியவாறு பாஞே எழுந்திருந்தாள்.

கம்பத்தின்மேல் புறுக்கள் உட்கார்ந்து ஒலியெழுப்பிக் கொண்டிருந்தன. புறுக்களின் ஒலி, வாழ்கிற வீட்டில் ஒலிப்பது அபசகுணம் என்று கேள்விப்பட்டதுண்டு. ஆகவே, ஹாத், ஹாத் என்று கூவி கையை உயர்த்தி அவற்றை விரட்டிஞள்.

மாலையில் அவள் குருத்வாராவுக்குச் சென்ருள். வெகு நேரம் வரையில் அங்கேயே உட்கார்ந்து, பிரார்த்தனைப் பாடல்களைச் செவி மடுத்தாள். பிறகு எழுந்திருந்து அந்த ஆலயத்தைத் துப்புரவு செய்தாள். குளத்திலிருந்து நீர் சேந்தி, செடிகளுக்கெல்லாம் ஊற்றிஞள். உள்ளேயிருந்து பூசாரி வெளியில் வந்து அவளுக்குப் பிரசாதம் அளித்தார். "என்னுடைய அறையையும் சுத்தம் செய்து விட முடியுமா" அவர் கேட்டுக் கொண்டார்.

அவர் முகத்தை ஏறிட்டும் பார்க்காமல் பிரசாதத்தைக் கையில் வாங்கிக் கொண்டவாறு கூறிஞள்: "ஆகட்டும் பாபாஜி!"

புதுச் செருப்பு கடித்த காரணத்தால் விந்தியவாறு மெதுவாக நடந்து வீடு திரும்பிக் கொண்டிருந்த பாஞேவைத் தன் வீட்டு முற்றத்தில் நின்றவாறே பார்த்தாள் வசனி. "கல்யாணத்தில் மிகவும் அதிகமாக வேலைசெய்து களைத்து விட்டாய் என்று நினைக்கிறேன்" என்று அவள் கூறிஞள்."

"வசனி, எனக்கு ஒன்றுமே புரியவில்லை. உடம்பு சரியில்லை, ஒரே எரிச்சல்." அவள் பதிலிறுத்தாள்.

"கண்தான்பட்டிருக்கும். நான்கு பேருடைய வேலையைத் தனியாளாக சமாளித்தாய் அல்லவா?" ஆஞல் ஒன்று மட்டும்

நினைவில் வைத்துக் கொள். இதற்குக் கைமாறு ஏதும் கிடையாது. எல்லாம் உடம்பு நன்றாக இருக்கும் வரைதான்."

"குகையில் பெரியவர் ஒருவர் இருக்கிறார். அவரை வேப்பிலை மந்திரிக்கச் செய். கணப்பொழுதில் வலி தீர்ந்துவிடும். என் மகளுக்கு என்ன ஆயிற்று தெரியுமா? கண் நோவு வந்து, என்ன மருந்து போட்டும் குணமாகவில்லை. அவளுக்குக் கண்ணேறுதான் என்று பார்த்தவர்கள் எல்லோரும் சொன்னார்கள். குகைக்கு நான்கு தரம் அழைத்துக் கொண்டு போனேன். கண் நேராகிவிட்டது. இத்தனைக்கும் டாக்டரிடமிருந்து இவர் எவ்வளவோ மருந்துகள் வாங்கி வந்தார். ஆனால் எனக்கு உறுதியாகத் தெரியும்... அது பாபாவின் வேப்பிலை மந்திரத்தினால்தான் குணமாயிற்று."

"தன்னால் எல்லாம் சரியாகிவிடும் வசனி. எனக்கு ஒரு நோவும் வராது." வசனி வீட்டுக் குழாயை இயக்கிக் கையை வைத்து அங்கேயே நீரருந்தத் தொடங்கினாள் பானோ. நிறையத் தண்ணீர் குடித்தாள்.

மாடுகளுக்காகத் தவிடும், பிண்ணாக்கும், கலந்தவாறே வசனி கூறினாள்: "தம்ளரை எடுத்துக் கொள்ளேன் பானோ."

"ஒன்றும் தேவையில்லை." நனைந்துபோன குர்த்தாவின் ஓரங்களைப் பிழிந்தவாறே, வீட்டை நோக்கி நடந்தாள் பானோ.

வீட்டிற்கு வந்து, கொசுவம் வைத்த பாவாடையை அவிழ்த்து மூலையில் மாட்டினாள். பெட்டிக்கு அடியில் செருப்பைத் தள்ளினாள். அடுப்பிலிருந்து வெந்த பருப்பை எடுத்து மசித்தாள். சப்பாத்தி தயாரித்தாள்.

அவளுடைய நெஞ்சில் ஏதோ வேதனை தோன்றிற்று. ஒரு கிண்ணத்தில் பருப்பை எடுத்துக் கையில் வைத்துக் கொண்டாள். இன்னொன்றில் ரொட்டியை எடுத்து உண்டதாகப் பெயர் பண்ணினாள். ஏனோ நெஞ்சுக்குக் கீழே உணவு இறங்கவே இல்லை. அதைப் பிட்டுப் பிட்டு நாய்க்குப் போட்டுவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டாள்.

அடுத்து ஏதேதோ யோசித்தவளாக, மாட்டுத் தீவனத்தைத் திருகையிலிட்டு அரைக்கத் தொடங்கினாள். அவள் முன்பு ஒருதரம் கூட அப்படிச் செய்ததில்லை.

"அதை விட்டுத் தள்ளு பானோ. மிஷினில் கொடுத்து, உடைத்துக் கொள்ளலாம்." நாராயணன் அவளைப் பார்த்துக் கூறினான்.

திருகை இயங்கும் காரணத்தினால், அவன் கூறியது பானோவின் செவிகளில் விழவில்லை. அவள் அதைச் சுற்றிக்கொண்டே இருந்தாள்.

நாராயணன் அருகில் வந்து, திருகையின் கைப்பிடியைத் தடுத்து நிறுத்தினான். "இன்று என்ன ஆயிற்று உனக்கு, பானோ?"

"உடம்பில் இனம் தெரியாத நோவு, வியர்வை வந்தால் சீராகி விடுமென்று இதைச் சுற்றுகிறேன்."

"தனக்குத் தானே வைத்தியம் பண்ணிக் கொள்கிறாயே. உடம்பில் நோவு கண்டால் திருகைச் சுற்ற வேண்டுமா? முகத்தைப் பார், எப்படி வெளுத்துக் கிடக்கிறது." அவளை இருக்கையிலிருந்து எழுப்பினான் நாராயணன்.

"எனக்கு ஒன்றும் ஆகிவிடாது. என் மாதிரி பயனற்ற ஜீவன்களை இறைவனும் அழைத்துக் கொள்ளமாட்டார்."

"நீ பயனற்றவளா? நீ இல்லாவிட்டால் நான் வெறும் அனாதையாகி விடுவேன். எனக்குத் தகப்பனும் இல்லை, தம்பியும் இல்லை. நீ பேசாமல் போர்த்திக் கொண்டு படு. நான் பரிகாரியிடமிருந்து மருந்து வாங்கி வருகிறேன். சர்க்கரை போடாத தேனீரைச் சிறிது குடி. பிறகு பார், கணநேரத்தில் எல்லாம் சீராகிவிடும்" நாராயணன் வெளியேறி நடந்தான்.

"வளையல் வாங்கலையோ, வளையல்"-தெருவில் வளையல் விற்பவனின் குரல் கேட்டது.

பானோ வெளியில் வந்து பார்த்தாள். வளையல் வியாபாரியை அழைத்து, வெகுநேரம் அவற்றை மாற்றி மாற்றிப் போட்டு அழகு பார்த்தாள். ஒன்றும் அவளுக்குப் பிடித்ததாக இல்லை. எழுந்து நின்று, "இந்தத் தடவை ஒன்றும் வேண்டாம் ஐயா, பிழைத்துக் கிடந்தால், பின்னொரு முறை பார்த்துக் கொள்ளலாம்" என்று கூறினாள்.

வியாபாரி ஏதோ கோபமாகப் பதில் சொல்ல விரும்பினான். அவள் சந்து வழியாக வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தாள். கதவையும் மூடிக் கொண்டாள். முணுமுணுத்தவாறே வியாபாரி அந்த வளையல்களைக் குவித்துச் சீராக்கி முடிச்சுப் போட்டுக் கொண்டான். "வளையல் வாங்கலையோ வளையல்" அவனுடைய குரலொலி அந்த வீதியில் மீண்டும் எழும்பிற்று.

விழித்தும், உறங்கியும் கழியும் நாட்கள். அவற்றின் பின்னால் உருண்டோடி வரும் இரவுகள். இவைகள் அனைத்தும் பானோவை அண்டி நகர்ந்தன. பானோ உட்கார்ந்தால் அவையும் அமர்ந்து போகும். அவளுடைய மன இயல்புக்கு ஏற்ப அவைகளும் இயங்கின. பானோ ஒவ்வொரு நாளும் இரண்டு முறை குருத்வாரா சென்று திரும்பினாள்.

போதகர் கூறும் பொன்னுரைகளைப் பொழுது போவதே தெரியாமல் கேட்டுக் கொண்டிருந்தாள். சில சமயம் எல்லாம் செவியில் புகுந்தன. சிலவேளை ஒன்றுமே புரியவில்லை.

இறை மந்திரங்களை ஓதி முடித்த பின்னர், பூசாரி எழுந்து வெளியே நோக்கினார் பானே முற்றத்தைக் கூட்டித் துப்புரவாக்கிக் கொண்டிருந்தாள். கூடவே ஒருமைப்பட்ட மனத்துடன் பாடிக்கொண்டும் இருந்தாள்.

என்னினிய நாயகனுக்கு
இன்றைய நிலை சொல்லுவாய்,
என்னினிய நாயகனுக்கு

அன்றையக் கைங்கர்யம் முடிந்த பிறகு, பூசாரி தன்னுடைய சிற்றறைக்குச் சென்றார். பானே எதையும் கவனிக்கவே இல்லை. முற்றம் கூட்டி முடித்த பிறகு, அவளும் அந்தச் சிற்றறைக்குச் சென்றாள். அங்கே பூசாரி இருப்பதைக் கண்டு திரும்ப யத்தனித்தாள். அதைக் கண்ட பூசாரி, "இங்கும் சுத்தம் செய்துவிட்டுப் போகலாமே" என்று கூறினார். பிரார்த்தனைப் புத்தகத்துடன் கட்டிலின்மேல் அமர்ந்து கொண்டார்.

அதிகம் தூசி எழும்பாத வகையில் மெல்ல, மெல்ல அந்த அறையைக் கூட்டியபிறகு, துடைப்பத்தை வெளியில் வைத்தாள். பிறகு கைகழுவிக் கொண்டாள்.

"பிரசாதம் வாங்கிக் கொண்டு போகலாம்!" பூசாரி குரல் கொடுத்தார். பானே திரும்ப வந்தாள்.

"இறைவனின் சேவையில் உன் மனம் லயித்திருப்பது விளங்குகிறது."

பானே பதில் ஏதும் சொல்லவில்லை.

புனித நூலைப் பட்டுத்துணியில் பொதிந்தவாறு பேசினார். அவர்: "இந்த உலகிலிருந்து நாம் வேறு என்ன கட்டி வாரிக்கொண்டு போய்விடப் போகிறோம்!" அவர் தொடர்ந்து பேசினார்.- "நீ நாராயணனின் வீட்டிலிருந்து வருகிறாய் அல்லவா?

"ஆமாம் ஐயா!"

"குழந்தை இருக்கிறதா?"

"இல்லை ஐயா!"

"மனங்கனிந்து தொண்டு செய்தால், அவன் எல்லாம் தருவான். அவனுடைய ஆட்சியில் ஒரு குறையுமில்லை."

பானே பதில் ஏதும் சொல்லவில்லை.

"நான் உனக்கொரு மந்திர உபதேசம் செய்கிறேன். அதை ஒவ்வொரு நாளும் நூற்றியொரு முறை ஜபித்தால், உன் வேண்டுகோள் நிறைவேறும். எழுதித் தரட்டுமா?"

"எனக்கு எழுதப்படிக்கத் தெரியாது. நீங்கள் வாய்மூலம் உபதேசித்தாலே போதும். மனப்பாடம் ஆகிவிடும்."

"சரி கேட்டுக் கொள்."

"உள் நின்று உறையும் இறைவா!
என்றன் எண்ணம் நிறைவு செய்க!"

பானோ இதை நிறுத்தித் திருப்பிக் கூறினாள்.

"இதையே ஐந்து தரம் சொல்லு."

"உள் நின்று உறையும்..." பானோ ஐந்து தரம் முறை வைத்தாள்.

"பிரசாதம் வாங்கிக்கொள். பூசாரி சிரம்தாழ்த்தி வணங்கிப் புனிதநூலை அதனிடத்தில் வைத்தார். மூடிபோட்ட டப்பாவிலிருந்து சர்க்கரை வில்லைகளை எடுத்து, பானோவின் முன்பு நீட்டினர். பானோ முன்றானையை விரித்துக் காட்டினாள்.

பூசாரி சர்க்கரை வில்லைகளைப் போட்டுவிட்டு அவளுடைய கையை மெல்லப் பற்றினார்.

"குரு தட்சிணை தரவேண்டாமா?" அவருடைய கருத்த தாடி, மீசைகளுக்கு இடையே இருந்து, வெண்பற்கள் வெளிப்பட்டன.

பானோ நிலைகுத்திப் போய் நின்றாள். கையை விடுவித்துக் கொண்டால், கோயில் பிரசாதம் சிதறிப்போகுமே.

வெளியில் கிணற்றடியில் வாளியின் ஓசை கேட்டது. பூஜாரி கையைத் தளர்த்தினார்.

பதறியவாறு வெளியேற முயன்றாள் பானோ !

"நான் வேடிக்கையாக உன்னைப் பரீட்சை செய்து பார்த்தேன். ஆலயப்பணியை எந்தக் காரணம் தொட்டும் நிறுத்திவிடாதே. இந்த உலகிலிருந்து வேறு என்ன கொண்டு போகப் போகிறோம்" பின் தொடர்ந்தவாறே கூறினார் பூசாரி.

மீண்டும் சிரம் தாழ்த்தி, தெய்வத்தை வணங்காமலே ஓடினாள் பானோ.

"ஸத்நாம், ஸ்ரீவாஹே குரு." பின்னாலிருந்து உரக்கக் கூவினார் பூசாரி.

வீடு திரும்பிக் கொண்டிருந்த பானோவின் காலில் ஒரு முள் தைத்தது. அதை இழுத்துப் பிடுங்கியதும்; குபுகுபு வென்று உதிரம் கொப்புளித்தது.

முன்றானையின் முனையைக் கிழித்து, அவள் காயத்தின்மேல் சுற்றினாள். விந்தி, விந்தி நடந்து அவள் வீட்டை நோக்கி நடந்தாள். வீடு சேர்ந்த பிறகு பருப்பு வேகவைத்தாள். சப்பாத்தி சுட்டாள். அறையைத் துப்புரவு செய்தாள்.

குதிரிலிருந்து கோதுமையை எடுத்து அரைக்க முயன்றபோது, அவளுடைய கால் வேதனையில் நொந்தது.

அன்று உணவருந்த உட்கார்ந்த நாராயணன், தாலத்தை வீசினான். "உப்பை இட்டு இந்தப் பருப்பை விஷமாக்கிவிட்டாயே," அவன் சீறினான்.

கொஞ்சம் பருப்பை வாயிலிட்டுச் சுவைத்துப் பார்த்தாள். உண்மையிலேயே அது நாவைக் கரித்தது. தனக்குத்தானே அவள் கூறிக்கொண்டாள்: "ஏனோ தெரியாமல் இரண்டு முறை உப்பைப் போட்டு விட்டேன்."

"கொஞ்சம், சீனியும் நெய்யும் கலந்து தரட்டுமா? அவள் நாராயணனைக் கேட்டாள்.

"வெறும் சர்க்கரையை வாயிலிட்டுக் கொண்டால் என் ஈறு தடித்து விடுமென்பது உனக்குத் தெரியாதா?" நாராயணன் மீண்டும் உறுமினான்.

"கொஞ்சம் பொறுங்கள், ஸந்தி அம்மாவிடம் போய்க் கொஞ்சம் பருப்பு வாங்கி வருகிறேன்." அவள் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு ஓடினாள்.

ஸந்தி நெய்யைச் சூடுபண்ணிக் கொண்டிருந்தாள். "வணங்குகிறேன் அம்மா, இன்றைக்கு என்ன செய்திருக்கிறீர்கள்."

"இன்றைக்கு அவர் நகரத்திற்குப் போயிருக்கிறார். அதனால் கடலைமாவு ரொட்டிதான் செய்தேன். பிள்ளைகள் எதைக் கொடுத்தாலும் சாப்பிட்டுவிடும். நானும் வெங்காயத்துடன் ஓரிரண்டு ரொட்டி தின்று விடுவேன். இன்று வீட்டில் வேறு ஒன்றுமில்லை."

"இன்று தவறிப்போய் பருப்பில் இரண்டு முறை உப்பைப் போட்டுவிட்டேன். அவர் ரகளை செய்கிறார். நீங்கள் ஏதாவது செய்திருப்பீர்கள் என்று எண்ணி வந்தேன்."

"உட்காரேன்"

"இல்லை அம்மா, போகவேண்டும்." காலிக் கிண்ணத்துடன் அவள் வீடு திரும்பினாள்.

இதற்குள் நாராயணன் அடுப்பில் தேனீர் தயாரிக்க முயன்றான், இன்றைக்குத் தேனீருடனேயே ரொட்டி சாப்பிடுவது என்று

முடிவு செய்து. அவளைக் கண்டதும் அடுப்பண்டையிலிருந்து நகர்ந்தான்.

பானோ சரிக்குச்சரி பால் சேர்த்துத் தேனீர் தயாரித்தாள். அது பொங்கத் தொடங்கியதும் கீழே இறக்க முயன்றாள். அந்தச் சூடான பாத்திரம் கைதவறிக் கீழே விழுந்தது. அந்தப் பொங்கிய தேனீர் அவளுடைய காலிலே கொட்டிப் போயிற்று.

நாராயணன் அவளுடைய இடுப்பில் இரண்டு குத்துவிட்டான். சினந்தவாறு, கத்தினான், "மூதேவி, உன்னுடைய கவனம் வேறு எதிலோ இருக்கிறது. கீழே கொட்டுவதற்காகவா, இவ்வளவு சிரமப்பட்டு இதைத் தயாரித்தாய்?"

தீப்புண்ணினால் எரிந்து கொண்டிருந்த காலை குளிர்விக்கும் பொருட்டு பானோ அதில் தண்ணீரைத் தெளித்தாள். ஆனால் அது இன்னும் எரிச்சலை அதிகமாக்கிற்று.

இலை உதிர்காலம், ஈரமில்லாத பேய்க்காற்று, இடையிடையே புழுதியைக் கிளறிவிடும் சூறாவளி, அமைதியைக் குலைக்கும் வெயில்.

சுவரின் நிழலில் துணியை விரித்துக் குளிர் காலத்தில் எடுத்த பஞ்சைக் குழவியால் சீர் செய்து கொண்டிருந்தாள் பானோ. அடிக்கடி அவளுக்குக் களைப்பு மேலிட்டது.

சுவரின் மறுபக்கத்திலிருந்து குரல் கொடுத்தாள் வசனி. "இந்த நாளில் பஞ்சு சுத்தம் செய்யத் துவங்கிவிட்டாயா?"

"எருமைக்குப் பருத்திக்கொட்டை வேண்டியிருந்தது வசனி." பஞ்சைச் சீர் செய்வதை நிறுத்திவிட்டு, தண்ணீர் குடிக்க எழுந்தாள் பானோ.

சுவரின் மேல் துணியை உலரப் போட்டவாறே பேசினாள் வசனி:

முன்பிருந்ததைவிட இது நல்ல எருமை. மேலும் அந்தக் கன்றும் பெரிதானால், இன்னும் நான்கு வருஷத்தில் நல்ல பலன் தரும்."

"நான்கு வருஷங்களில் எந்த ராஜா, எந்தக் குடிமகன் வருவாரோ. யாருக்குத் தெரியும்?"

"காலம் போகும் வேகம் நமக்குப் புரியாததொன்று. சில நொடிகளில் எல்லாம் பறந்துவிடும். எங்கள் வீட்டுக் கிழவி இறந்து நான்காண்டுகள் கழிந்துவிட்டன. நேற்று நடந்ததுபோல் இருக்கிறது. அவள் போனபோது நான் எப்படி அழுதேன் தெரியுமா?"

பானோ மீண்டும் பஞ்சை அரைக்கத் துவங்கினாள். "மனித வாழ்க்கை ஒரு நீர்த்துளி வசனி. எனது, உனது என்று அவன் ஏதோ உளறுகிறான்" அவள் கூறினாள்.

"உண்மை பாஞே. மரணம் ஒன்றுதான் சத்தியம். மற்றதெல்லாம் பொய்." துணிகளை உலர்த்திவிட்டு முற்றத்திலிருந்து திரும்பிப் போனுள் வசனி.

இதற்குள் நாராயணன் திரும்பி வந்தான். ஹுக்காக் குடுவையை நிரப்பி, அவளருகில் உட்கார்ந்து புகைக்கத் தொடங்கிஞன். பிறகு அவனுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை. குடுவையைப் பக்கவாட்டில் வைத்துவிட்டு அவளுடன் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தான். "உன் துணியை இப்போதெல்லாம் துவைப்பதே இல்லையா, பாஞே? முன்பெல்லாம் என் துணியின் அழுக்கைப் பற்றிப் புகார் சொல்லுவாய். இப்போது என்னையும்விட, அழுக்காகத் துணி உடுத்திக் கொள்ளுகிருயே!"

"அப்படியா, என் துணி அழுக்காகவா இருக்கிறது" அதைப் பார்த்தவாறு கேட்டாள்.

"என்னவோ தெரியவில்லை. நீ இப்போதெல்லாம் எதையோ பறிகொடுத்தவள் போல் காணப்படுகிருய். சொந்த வீட்டிலேயே வெளியாளைப் போல் நடந்து கொள்கிருய்."

"அப்படி ஒன்றும் இல்லையே"- பஞ்சை அரைத்தவாறு பதிலிறுத்தாள் பாஞே.

"நீ என்ஞேடு வந்து விட்டது உண்மைதான். ஆஞல் உன் சித்தம் எங்கேயோ பின்ஞல் இருக்கிறது."

"பின்ஞல் எனக்கு யார் இருக்கிருர்கள்?" அசிரத்தையோடு வினவிஞள் பாஞே.

"எப்போதும் முகத்தைத் தூக்கிக் கொண்டு இருக்கிருயே உனக்கு இங்கே என்ன குறைவு? உணவா? உடையா? கொஞ்சம் சொல்லேன்."

"அப்படி ஒன்றும் இல்லை." பஞ்சை அழுத்தி அரைத்தவாறு கூறிஞள்.

"பாஞே!"

"என்ன!"

"என்னிடம் எந்த விஷயத்திலாவது மனத்தாங்கலா, சுமுகமாகப் பேசக் கூட மாட்டேன் என்கிருயே!"

"நான் எதற்காகக் கோபித்துக் கொள்ளவேண்டும்?"

சிறிது நேரம் அவர்களிடையே மௌனம் நிலவிற்று. நாராயணன் எழுந்திருந்து நின்ருன். பிறகு எதையோ எண்ணிக் கொண்டு மீண்டும் உட்கார்ந்தான்.

வானத்தில் ஓரிரண்டு முகிற் தொகுதி கருத்தது. ஒரு வேளை இரவுக்குள் மழை வந்தாலும் வரலாம். தனக்குத் தானேயோ அல்லது பானுவுக்காகவோ இதைக் கூறிக் கொண்டான்.

பானு பதில் ஏதும் பேசவில்லை. அவன் பானுவை மீண்டும் விளித்தான். அவள் 'ஏன்' என்று கேட்கவும், "ஒன்றுமில்லை" என்று கூறிவிட்டு ஹுக்காக் குடுவையை எடுத்து உறிஞ்சத் தொடங்கினான். பானு பஞ்சு அரைப்பதை நிறுத்தினாள்.

"பானு!" அவன் மீண்டும் விளித்தான். குடுவையிலிருந்த அணைந்த கரித்துண்டுகளை ஒரு புறமாக் கொட்டினான்.

"என்ன வேண்டும்?"

"நம் வீட்டு பீபியின் திருமணத்திற்கு ஹரியா வந்தானல்லவா?"

"ஆமாம்" பஞ்சை அளைந்தவாறே பதில் கூறினாள் பானு.

"அவனுக்கு ஒரு மைத்துனி இருக்கிறாள். நீ என்னை எப்படி வேண்டுமானாலும் நினைத்துக்கொள். நான் சத்தியமாகச் சொல்லுகிறேன், உன்னைக் கைவிடமாட்டேன். வீட்டுக்கு அதிகாரி நீதான். இதை எழுதிவேண்டுமானாலும் தருகிறேன். வயதான காலத்தில் நம்மைப் பராமரிக்க ஒரு வாரிசு வேண்டும். ஒரு குழந்தைக்காகத்தான் இவ்வளவும். நான் ஹரியாவிடம் தெளிவாகச் சொல்லிவிட்டேன். பானுவைக் கேட்பேன், அவள் சரி என்று சொன்னால்தான், மேலே ஏதாவது நடவடிக்கை என்று..."

பானு விடை ஏதும் கூறவில்லை.

கையில் படிந்திருந்த அழுக்கை நகத்தினாலேயே நீக்கத் துவங்கினாள்.

"பானு, நான் இந்த உலகத்தையே மறந்திருந்தேன். நீ என் வாழ்க்கையில் எதிர்ப்பட்டாய். என் நெஞ்சில் ஆசை துளிர்த்தது."

இதற்கும் பானு பதில் ஏதும் கூறவில்லை.

"என்னைப் பார் பானு, ஒரு குழந்தை பிறந்துவிட்டால் போதும். அதற்குப் பிறகு என் வம்சம் தழைத்துவிடும். இந்த மாதிரியெல்லாம் நான் யோசனையே செய்யமாட்டேன். இப்போதும் நான் தெய்வத்தின் ஆணையாகச் சொல்லுகிறேன். எப்போதும் இந்த வீட்டிற்கு அதிகாரி நீதான்."

விரைந்து கொண்டிருந்த மேகத்திரள், ஒரு கணம் திரண்டு நின்றது. வெகு தொலைவில் கிலியூட்டும் ஒலியுடன் இடி இடித்தது. பெரிய, பெரிய நீர்த்துளிகள் மண்ணில் விழுந்தன.

"எழுந்திருக்கலாமா?" நாராயணன் பானுவைப் பார்த்துக் கேட்டான்.

"இன்னும் சிறிது நேரம் பார்ப்போமே. ஒரு வேளை மேகம் விலகிப் போனாலும் போகலாம்." அவள் கூறினாள்.

... பருவம் மாறிற்று. வெம்மையான பிற்பகல் ஈரமில்லாத காற்று வீசிற்று. துயரம் தோய்ந்த மனத்தோடு பானோ ஸந்தியிடம் உட்கார்ந்திருந்தாள்.

"நேற்று ஒரு விசித்திரமான நிகழ்ச்சி நடந்தது அம்மா." அவள் அதை விவரிக்கத் துவங்கினாள். நேற்றிரவு ரொட்டி செய்த பிறகு கட்டிலில் உட்கார்ந்திருந்தேன். ஒரே கும்மிருட்டு. வாசலில் சந்திலிருந்து யாரோ என்னைக் கூப்பிட்டாற்போல் இருந்தது. உடனடியாக வெளியில் ஓடி வந்து பார்த்தேன். ஒருவருமே இல்லை. எனக்கே வியப்பாக இருந்தது. இப்படி எல்லாம் ஏன் நிகழவேண்டும்."

"ஏதோ உனக்கு அப்படியெல்லாம் தோன்றி இருக்கிறது. இந்த மாதிரி மானசீகத் தோற்றங்களை எல்லாம் நம்பி, வீட்டிற்கு வெளியே வரக் கூடாது."

"அப்புறம் ராத்திரி கனவில் என் அம்மாவின் உருவம் தெரிந்தது. அவளுடைய குரலும் தெளிவாகக் கேட்டது : 'அடி பானோ நான் உன்னைத் தேடித் தேடிக் களைத்துப் போனேன். எனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது. கொஞ்சம் தண்ணீர் கொடேன்,' என்று சொல்வதுபோல"

ஸந்தி சட்டினி தயாரித்துக் கொண்டிருந்த குழவியை அதனிடத்தில் வைத்தவாறு கேட்டாள், "பிறகு தண்ணீர் கொடுத்தாயா?"

"இல்லை அம்மா! அந்த நேரத்தில் சேவல் கூவத் தொடங்கிற்று. நான் கண் விழித்தேன்"

"நல்லது பானோ! இறந்தவர்களுக்கு உணவோ, குடிக்கவோ கொடுப்பதாகக் கனவு காண்பது நல்லதற்கில்லை."

"நன்மையோ தீமையோ, அது ஒன்றும் எனக்குத் தெரியாது. கனவில் என் தாயாரைப் பார்த்து என் நெஞ்சு நிறைந்து போயிற்று. இவ்வளவு நாட்களுக்குப் பிறகு, இப்போதுதான் தாயாரைப் பார்க்கக் கொடுத்து வைத்தது."

"அவள் எங்கே வாழ்ந்தாலும் உங்களை எல்லாம் நினைத்துத் தவித்துக் கொண்டு தானிருப்பாள். என்ன இருந்தாலும் அம்மா இல்லையா?"

"அன்று புரோகிதருக்கு உன்னிடமிருந்து கடன்வாங்கிக் கொடுத்தேனல்லவா?, அந்த ரூபாயைத் திருப்பித் தருவதற்காகத்தான்

இப்போது இங்கு வந்தேன்." தனது ஜேபியிலிருந்து துணியில் முடிந்து வைத்திருந்த நோட்டை எடுத்து அவளிடம் கொடுத்தாள்.

"எங்கேயாவது ரூபாய் ஓடிப் போகிறதா? அதற்கு என்ன அவசரம்?" நோட்டைப் பெற்றுக்கொண்டு பானுவை உட்காரும்படி வேண்டினாள்.

"இல்லை. நான் போகவேண்டும். எப்படிச் சுழன்று கொண்டு வருகிறது பாருங்கள் புயல்காற்று! சாளரங்களை எல்லாம் இழுத்து மூடவேண்டும். இல்லாவிட்டால் எல்லாவற்றிலும் புழுதி நிறைந்து விடும்."

"கடவுள் ஏன்தான் நம்மை இப்படிச் சோதனை செய்கிறாரோ தெரியவில்லை. இந்தமாதிரிப் புயல்காற்று பயிர்களை நாசமாக்கிவிடும்."

"எல்லாம் அவனுடைய அருள்" என்று கூறியவாறே வீட்டிற்குத் திரும்பினாள் பானு. சில கணங்களிலேயே கொடும் புயல்காற்று வீசத்தொடங்கிவிட்டது.

தரையில் கிடந்த இலைகளும் சருகும் இடம்பெயர்ந்தன. கதவுகள் நிலையை விட்டுக் கழன்றுவிடும்போல் ஆகிவிட்டன. சாளரக் கதவுகள் அடித்துக் கொண்டன. மரக்கிளைகள் பேரொலியுடன் ஒடிந்து விழுந்தன. யாரோ கையால் பிடித்துத் தள்ளுவதுபோல் அவ்வளவு வலிமையுடன் வீசிற்று காற்று. ஏற்றங்கள் நின்று போயின. வழி நடந்தவர்கள் ஆதரவான இடங்களை நோக்கி ஓடினர். பட்சிகள் அச்ச மிகுதியால் கூச்சலிட்டன. வீட்டிலிருந்த பெரியவர்கள், இதன் அபாயம் விலக வேண்டும் என்று இறைவனின் நாமத்தைச் செபித்தனர். குழந்தைகளுக்கோ இது பெரிய வேடிக்கையாக இருந்தது.

பானு வீட்டின் சாளரங்களை எல்லாம் அழுந்த மூடினாள். பிறகு மெல்ல மெல்ல அடிவைத்து முற்றத்திற்கு வந்தபோது, திடீரென்று தலைசுற்றி மயங்கிக் கீழே விழுந்துவிட்டாள். விழுந்த ஓரிரு கணங்களில் சமாளித்துக் கொண்டு எழுந்திருந்தாள். ஆனால் ஏனோ, மீண்டும் தள்ளாடித் தரையில் சாய்ந்தாள்.

வசனி உறக்கக் கூவினாள், "அம்மா, ஸந்தி, இங்கே வந்து பார். பானு, கீழே விழுந்துவிட்டாள்." ஓடி வந்து அவளைத் தூக்க முயன்றாள்.

ஸந்தி குரல் கேட்டு பதறிப் போய் விரைந்தாள். இருவரும், சிரமப்பட்டு பானுவைத் தூக்கிக் கட்டிலில் கிடத்தினார்கள். அவளுடைய தலையில் ஆழமான காயம் பட்டுக் குபுகுபு வென்று

உதிரம் பெருகிற்று. சில நிமிஷங்களில் அக்கம்பக்கத்து வீட்டினர் எல்லாம் குழுமி விட்டனர்.

ஸந்தி தன் தாவணியைக் கிழித்துப் பஞ்சை வைத்து அவள் தலையில் கட்டுப் போட்டாள். ஆனால் உதிரப் போக்கு நிற்கவில்லை. துணியெல்லாம் ரத்தம்.

வெளியே இருந்த நராயணனை அழைத்து வந்தார்கள். அவனும் உடனடியாக பக்தூவை நகரத்திற்கு அனுப்பி வைத்தான் டாக்டரை அழைத்துவர. சூடான பாலில் நெய்யைக் கலந்து பாரோவுக்குக் கொடுத்தார்கள். எத்தகைய உணர்வுமின்றிக் கிழித்த நாரைப்போல் கிடந்தாள் அவள். டாக்டர் வருவதற்குள் பாரோவின் தலைக் காயத்தைச் சுற்றிக் கட்டியிருந்த துணி முழுவதும் உதிரத்தினால் நனைந்துவிட்டது.

குளிர்ந்து கொண்டிருந்த பாரோவின் கையைத் தடவியவாறே கூறினாள் ஸந்தி, "பாவம், வீட்டுச் சாளரங்களையெல்லாம், அழுந்தி மூட வேண்டுமென்று ஓடிவந்தாள்." மருத்துவர் வந்ததும் அவரைக் கையெடுத்துக் கும்பிட்டான் நாராயணன். "எப்படியாவது என் பாரோவைக் காப்பாற்றுங்கள். உங்களுக்கு என்ன வேண்டுமானாலும் தருகிறேன்."

அவளுக்கு உணர்வு வரவழைக்கக் கூடிய மருந்தூசியை உடலில் செலுத்தினார் டாக்டர். பாரோ சில நிமிஷங்களில் கண் விழித்து, சுற்றுமுற்றும் பார்த்தாள். அவளுக்குச் சிறிது பிரக்ஞை வந்தது. ஸந்தியின் கையை இறுகப் பற்றிக்கொண்டு வேண்டினாள்: "கொஞ்சம் தண்ணீர்." ஒரு சிறு கரண்டி நீரை அவள் வாயில் செலுத்தினாள் ஸந்தி. பாரோவின் பார்வை, நாராயணனின் மேல் வந்து நிலைத்தது. வாஹே குரு, வாஹே குரு.- அவள் இறைவனின் திருநாமத்தை உருப்போட்டாள்.

டாக்டர் அவளுக்கு இன்னொரு ஊசி போட்டார். "இவளை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லுங்கள்." பாரோவுக்கு இன்னும் சிறிது தெளிவு ஏற்பட்டது. ஒரு மாட்டு வண்டியில் உட்கார வைத்து மருத்துவமனைக்கு எடுத்துச் சென்றனர்.

காயத்தில் தையல் போடவேண்டியிருந்தது. பிறகு புதிய துணியினால் கட்டுப் போட்டார்கள். மருந்து கொடுத்தபிறகு அவளை மீண்டும் பரிசோதனை செய்தார்கள். படுக்கையில் கிடத்தினார்கள்.

ஒன்றரை மாதம அவள் படுக்கையிலேயே கிடந்தாள். நாராயணன் தினமும் அவளுக்கு உணவும், பாலும், தேனீரும் கொண்டு வந்தான்.

"நீங்கள் இப்படிக் கஷ்டப்பட வேண்டாம். பக்கத்துக் கடையிலிருந்து நான் எதையாவது வாங்கிச் சாப்பிட்டுக் கொள்கிறேன். நீங்கள் தினம், தினம் இப்படிச் சிரமப்படுவது எனக்குத் துயரத்தைத் தருகிறது." பானு நாராயணனிடம் கூறினாள்.

"எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை பானு."

"தினமும் உணவு தயாரிப்பது உங்களுக்குச் சிரமமாகத்தான் இருக்கும்." பானு வருத்தத்துடன் கூறினாள்.

"அப்படி ஒன்றும் இல்லை." என்று மழுப்பிய நாராயணன், புறப்படுவதற்காக எழுந்திருந்தான். ஒருநாள் அவளைக் காண்பதற் காக ஸந்தியும் வந்தாள். அவள் ஏதோ சொல்ல விரும்பியதைப் போலவும், ஏனே சொல்லாமல் திரும்புவது போலவும் பானுவுக்குத் தோன்றியது.

ஒன்றரை மாதத்திற்குப் பிறகு மெதுவாக வழிநடந்து பானு தன் வீட்டை அடைந்தாள். அடுப்பின் முன்னால் ஹரியாவின் மைத்துனி உட்கார்ந்து ரொட்டி தயாரித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். பானுவுக்குக் களைப்பாக இருந்தது. விரிப்பு ஏதுமில்லாத கட்டிலில் அப்படியே படுத்துக் கொண்டாள்.

"தேனீர் தயாரிக்கட்டுமா?" பாக்வந்தி நாராயணனைப் பார்த்துக் கேட்டாள்.

"தேனீர் குடிக்கிறாயா?" நாராயணன் பானுவிடம் வினவினான்.

"வேண்டாம்" பானு பதிலிறுத்தாள். சிலகணங்கள் அங்கே மௌனம் நிலவிற்று. பிறகு தண்ணீர் குடிப்பதற்காக மேடையி லிருந்து தம்ளரை எடுக்க எழுந்தாள் பானு.

"இதோ நான் தருகிறேன், தண்ணீர்" என்று கூறியவாறு அவளுடைய கையில் இருந்து லோட்டாவை வாங்கிக் கொண்டு, வசனி வீட்டுக் குழாயிலிருந்து புதிய நீர் கொண்டு வர வெளியே சென்றாள். பானு, நாராயணனின் முகத்தைப் பார்த்தாள்.

அவன் தலையைத் தாழ்த்திக் கொண்டான். தண்ணீருடன் பாக்வந்தி வீட்டிற்குள் விரைவாக வந்தாள். அவளிடம் தண்ணீரைக் கொடுத்துவிட்டு, நாராயணனைப் பார்த்துப் பேசினாள் : "இங்கே உட்கார்ந்து என்ன செய்கிறீர்கள். கடைத் தெருவுக்குச் சென்று சோப்பு ஒன்று வாங்கி வாரும்."

பதில் பேசாமல் கடைத் தெருவுக்குப் புறப்பட்டான் நாராயணன். "நல்லவாசனை உள்ள சோப்பாகப் பார்த்து வாங்கி வாருங்கள்." கடைவீதியை நோக்கி நடந்து கொண்டிருந்த நாராயணனை நோக்கிக் கூறினாள் பாக்வந்தி.

தான் அணிந்திருந்த ஆடை அழுக்காக இருப்பதைக் கவனித்தாள் பானு. "கொடியில் என் துணிகளை உலர்த்தி இருந்தேனே."

"ஓ, அவையெல்லாம் மிகவும் கிழிந்துபோய் இருந்தன. போன அமாவாசையன்று அதைப் பிச்சைக்காரர்களுக்குத் தானமாகக் கொடுத்துவிட்டேன். நீ என் துணி எதையாவது எடுத்து உடுத்திக் கொண்டு, கட்டியிருப்பவைகளைத் துவைக்கலாமே." உத்தரத்தில் குருவிகள் கூடுகட்டியிருந்தன ஒரு நீண்ட கம்பினால், அதைக் கலைத்தவாறு பேசினாள் பாக்வந்தி. "சனியன் பிடித்த குருவிகளினால் வீடு முழுவதும் புல்லு, குப்பை, அவள் அலுத்துக் கொண்டாள்.

"கூட்டிலே ஏதாவது முட்டை இருக்கப்போகிறது," பானு, அங்கலாய்த்தாள்.

"அப்படி இருந்தாலும் அது குருவியுடையதுதானே. உன்னுடையதல்லவே" பாக்வந்தி கேலியாகப் பேசினாள்.

பானுவுக்குப் பதில் ஏதும் சொல்லத் தோன்றவில்லை.

"மேடையை இடித்துவிட்டு வேறொன்று அமைத்து விட்டாயா?" புதிய மேடையைப் பார்த்தவாறு வினவினாள் பானு.

"ஆமாம். இந் நாளில் இரட்டைமேடை யார் கட்டுகிறார்கள்?"

நாராயணன் இரண்டு சோப்புக் கட்டி வாங்கி வந்தான். ஒன்றை பாக்வந்தியிடம் கொடுத்துவிட்டு, இன்னொன்றைப் பானுவின் அருகில் வைத்தான்.

கதவருகில் நாய் ஒன்று நின்று கொண்டிருந்தது. சட்டுவத்தை அதன்மேல் எறிந்து, "தொலை இங்கிருந்து" என்று கூவினாள் பாக்வந்தி. சட்டுவத்தினால் அடிபட்ட அந்தப் பெண் நாய், வீல் என்று கதறி வெளிப்புறம் ஓடிற்று. சிறிது தூரம் சென்ற பிறகு திரும்பவும் வந்து பழைய இடத்தில் நின்றது.

மீண்டும் நாய் அங்கே வந்து நிற்பதைக் காணப் பொறாத பாக்வந்தி, மிகுந்த சினத்துடன் பருப்புக் கடையும் மத்தை எடுத்து அதன்மேல் வீசினாள். வலி பொறுக்க இயலாமல் கூவிக்கொண்டே அது வெளியே ஓடிற்று.

"அதை ஏன் அப்படி வதைக்கிறாய்? நாயின் ஓலம் உடனடியாகக் கடவுளுக்கே கேட்கும் என்று சொல்லுவார்கள்." தன் நடுங்கும் கரங்களைத் தாவணியின் கீழ் ஒடுக்கிக் கொண்டவாறு கூறினாள் பானு.

பாக்வந்தி பதில் ஏதும் கூறவில்லை.

"நாயை விரட்டுவதில் ஒரு தோஷமுமில்லை. ஒரு நாள் என்னையும் அப்படி விரட்டி விடுவாயோ என்றுதான் பயப்படுகிறேன். இப்போது நீங்கள் இரண்டு பேர் ஆகிவிட்டீர்களல்லவா?" பெரிய நகைச்சுவையே உதிர்ப்பதாக எண்ணிக் கொண்டு பேசினான் நாராயணன்.

"உங்கள் குடும்பத்தில் அப்படியெல்லாம் வழக்கம் இருக்கும். நாங்கள் அவ்வாறு செய்யமாட்டோம்." இடக்காகப் பேசியவாறே தேனீர்க்கோப்பையை நாராயணனிடம் கொடுத்தாள் பாக்வந்தி.

"பானோவுக்கும் கொண்டுவா!"

"அவளுக்குத் தேவை இல்லாவிட்டாலும்கூட வலுக்கட்டாயமாகத் தரவேண்டுமா?"

"ஏன் தேவையில்லை? களைத்துப்போய் வந்திருக்கிறாள்."

"அவளுடைய தேவையைப் பற்றி உனக்கு அதிகமாகத் தெரியுமா? மனதுக்குப் பிடிக்காமல் இருக்கலாம்."

"இதோ பிடி தேனீர்." என்று நாராயணன் கூறினான். தன் கையிலிருந்த கோப்பையை அவளிடம் கொடுத்தான், அவளும் அதைப் பெற்றுக் கொண்டாள்.

பாக்வந்தி இன்னொரு கோப்பைத் தேனீரை கொண்டுவந்து நாராயணனிடம் கொடுத்தாள். "இப்போதுதான் விஷயம் புரிகிறது. அவளுக்கு உன் கையிலிருந்து தேனீர் வாங்கிக் கொள்ள ஆசை."

"கணவனின் உத்தரவைப் பரமேசுவரனுடையதாகப் பாவிக்க வேண்டும்."

"ஆகா, பரமேசுவரனின் அழகு வெகு அற்புதம்." கட்டை விரலைக் காட்டியவாறே பேசினாள் பாக்வந்தி.

"பரமேசுவரனுக்கு என்ன கொம்பு முளைத்திருக்குமா?" பேச்சு வார்த்தையில் அவளிடம் தோற்றுப்போனதாகக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை நாராயணன்.

"நல்லது பானோவின் பரமேசுவரரே! சக்கிலி மாதுவின் வீட்டிலிருந்து முதலில் என் செருப்பை வாங்கிவர வேண்டும். அளவெடுத்துக்கொண்டுபோய் எவ்வளவோ நாட்கள் ஆகின்றன. என்னுடைய செருப்பு ஒரேடியாக அறுந்துபோய் விட்டது. இன்றைக்குகூட நான் வெறுங்காலுடன் வெளியே நடக்க வேண்டியிருந்தது."

"மாது செருப்புக் கொண்டு வரவில்லையா?"

"எங்கே கொண்டு வந்தான்?"

"நான் போய்க் கேட்டு வருகிறேன்." நாராயணன் புறப் பட்டவன், சிறிது தயங்கி, பானுவின் முகத்தைப் பார்த்தான். "நீயும் கால் அளவைக் கொடுத்துவிடு பானு. இப்போதே சொல்லிவிட்டு வருகிறேன். இல்லையானால் நாளைக்கு நீ என்னை அனுப்புவாய்!"

"வேண்டாம், என்னுடைய செருப்பு, பழுதாகவே இல்லை." நாராயணன் புறப்பட்டுப் போவதை, வெகுநேரம் பார்த்துக் கொண்டே இருந்தாள் பானு.

இந்தக் கோலத்தில் பானுவை ஓரிரு முறை பார்த்தாள் பாக்வந்தி.

சில நிமிஷங்கள் மௌனத்திலேயே கழிந்தன.

"உன்னுடைய கட்டிலை மொட்டை மாடியில் போடட்டுமா? அங்கே நன்றாகக் காற்றுவரும்."

"அப்படியே செய்யுங்கள்" பானு அசிரத்தையாகப் பதிலிறுத்தாள்.

நாராயணனும், பாக்வந்தியும் உரையாடும் ஒலியும், அவர்கள் சிரித்து மகிழ்வதும் இரவு வெகு நேரம்வரை மாடியிலிருந்த பானுக்குத் தெளிவாகக் கேட்டது.

கோடைக்காலம் சென்று முடிந்தது. குளிர் தலை காட்டிற்று. பிறகு அதுவும் கழிந்தது.

.... நாராயணன் வீட்டிற்குள் நுழைந்த அதே வேளையில், பானு வெளியேறக் காலடி எடுத்துவைத்தாள்.

"பானு, எங்கே புறப்பட்டாய்?" சற்று சீற்றத்துடனேயே வினவினான்.

"பர்த்தாபி வீட்டுக் கிழவர் இறந்துவிட்டாரல்லவா, அங்கு போகிறேன்."

"இறந்தவர் வீட்டிற்கெல்லாம் சென்று ஒப்பாரி வைக்கும் வேலையை, நீ குத்தகை எடுத்திருக்கிறாயா என்ன? உறவினர்கள் அழாவிட்டாலும், நீ கண்ணை வீங்க வைத்துக் கொண்டு வந்து விடுகிறாய்."

"யாருக்காவது இன்னொருவர் அழமுடியுமா? எல்லோரும் தம் வீட்டுத் துயரங்களை எண்ணித்தான் வருந்துவார்கள்."

"நான் உயிருடனிருக்கும்போதே, எனக்காக அழுகிறாய் என்று தான் எனக்குப்படுகிறது.

"ஏதாவது நல்ல வார்த்தை வாயில் வரக்கூடாதா. ஏன் இப்படி விபரீதமாகப் பேசுகிறீர்கள்." பானு உடைந்த குரலில் கூறினாள்.

"அப்படியானால் நான் வீட்டிற்குள் நுழையும் வேளை பார்த்து, நீ ஏன் வெளியே போய்விடுகிறாய்."

என்னுடைய நெஞ்சில் எப்போதும் ஒரு திகில் குடிகொண் டிருக்கிறது. வெளியில் சென்று நாலுபேருடன் பழகினால் பாரம் குறைகிறது."

உள்ளேயிருந்த குப்பையை எல்லாம் திரட்டி வெளியே எறியவந்த பாக்வந்தி பேசத்து வங்கினாள் : "வீட்டிலே இருந்தால் ஏதாவது அவசியமான வேலைகள் செய்யவேண்டியிருக்குமே. என்னுடைய உடல்நிலை உங்களுக்கெல்லாம் தெரிந்ததுதான். இருந்தாலும் எல்லாச் சுமையையும் நானே ஏற்கிறேன். என்மேல் பழிதீர்த்துக் கொள்வதுபோல் நடந்தால் எப்படி?"

"பானோ, நீ என்ன இந்த வீட்டு விருந்தாளியா? முன்னால் நீயே எல்லா வேலைகளையும் செய்யவில்லையா? இப்போது செய்தால் உயிரா போய்விடும்?" சீறியவாறு வினவினான் நாராயணன்.

பானோ வரிசையாக விரலை மடக்கியவாறு வேகமாகப் பேசினாள்: "பாக்வந்தி என்ன வேலை சொன்னாலும் செய்கிறேன்." சாணி உருட்டவோ, துணி துவைக்கவோ, பாத்திரம் துலக்கவோ எல்லா வேலைகளையும் செய்துகொண்டு தானிருக்கிறேன். அவள் கேட்டுக் கொண்டால், ரொட்டியும் நான்தான் சுடுகிறேன்."

பானோவைக் கோணல் பார்வை பார்த்தவாறு கூறினாள் பாக்வந்தி: "தெய்வத்துக்கும், உலகத்துக்கும் பயந்து நான் அவளிடம் ஒரு வேலையும் சொல்வது இல்லை. நீங்கள் வீட்டில் இல்லாதபோது தனக்குத்தானே பாடிக் கொள்ளுகிறாள். இல்லை யானால் ஒப்பாரி வைக்கிறாள். யாருக்காக இந்த மாதிரியெல்லாம் செய்கிறாள் என்று எனக்குப் புரியவில்லை. வீட்டிலே உள்ளவருடைய நலனுக்காகப் பிரார்த்தனை செய்வதைக் கண்டதுண்டு. இங்கோ எல்லாம் தலைகீழ்ப் பாடம்."

"இதெல்லாம் உண்மைதானா?" நாராயணன் அவளைக் கோபத்துடன் ஏறிட்டு நோக்கினான். பானோவைப் பயம் பீடித்தது. நாராயணன் அவளை அடிக்கத் தொடங்குவானோ என்று பயந்தாள். ஸந்தியின் வீட்டுப் பக்கம் பார்வையைச் செலுத்தினாள்.

"இல்லையானால் இவளுக்கு ஒரு ஸந்தி கிடைத்திருக்கிறாள், வீட்டில் உள்ளவர்களைப்பற்றிக் கோள்சொல்ல." கையிலிருந்த துடைப் பத்தை விசுப்பலகையின் கீழ்வைத்தாள் பாக்வந்தி.

பானோ வீட்டினுள் நுழைந்து எருமை கட்டியிருந்த இடத்தைத் துப்புரவு செய்யத் துவங்கினாள்.

நாராயணனுக்குத் தாலத்தில் உணவளித்தவாறு பேசினாள் பாக்வந்தி : "உடைத்துச் சொல்லிவிடுவது நல்லது. நான் யாருக்கும் விலைக்கு வாங்கிய அடிமை இல்லை. அவள் நாள் முழுவதும் ஓய்வெடுத்துக் கொள்ளுகிறாள். நான் அடுப்படியில் சாகிறேன். தினமும் நான் அவளுக்காகப் பொங்கிப் போட முடியாது. தானே சமைக்கட்டும், சாப்பிடட்டும்."

"நீயும் கூடமாட உதவிசெய் பானோ!" பாக்வந்தியின் பேச்சுக்கு முழு உடன்பாடு தெரிவிக்காமல் அவளிடம் பேசினான் நாராயணன்.

"மேலுக்கு எளிதாகச் சொல்லிவிடலாம். கேட்டால், இளைய தாரம் என்று தூற்றுவார்கள். அவளையே கேளுங்களேன், இன்று வரை எதற்காவது அவளைத் தடை செய்திருக்கிறனா என்று. உங்கள் எதிரிலேயேதான் உட்கார்ந்திருக்கிறாள். முதல் காரியம் நான் அவளை ஒரு வேலையும் ஏவுவதில்லை. தவறிப்போய் ஏதாவதுசொல்லி விட்டாலும் இவள் முரண்டு பிடிப்பாள். முந்தாநாள் நான் இவளிடம் என்ன சொன்னேன் தெரியுமா? 'பானோ, கொஞ்ச நேரம் அடுப்பண்டையில் உட்கார்ந்திரு. நான் குளித்துவிட்டு வருகிறேன்' என்று சொல்லிவிட்டுக் குளித்தபிறகு வந்து பார்க்கிறேன். நாய் பாலை நக்கிக் கொண்டிருக்கிறது. இவளை எதற்காகக்காவல் வைத்து விட்டுப்போக வேண்டும்."

நாராயணன் துயரம் கப்பிய குரலில் பாக்வந்தியிடம் பேசினான்: "தலையில் அடிபட்டுக் காயமடைந்த பிறகே இவளுடைய நிலைமை சரியில்லை. நீதான் பார்த்துக் கொண்டிருக்கிறாயே, "சாப்பிட உட்காருகிறாள்; ஒரு ரொட்டி கொடுத்தால் அதுவே போதும். இரண்டு தந்தால் அதையும் சாப்பிடுகிறாள். கொடுக்காவிட்டால் மேலும் எதுவும் கேட்பதில்லை. புத்தி சுவாதீனமில்லாதவள்போல் வீதியை வளைய வருகிறாள். ஒருவரும் ஒன்றும் சொல்லாதபோதே அழத் தொடங்குகிறாள். நீ, அவளைக் கடிந்து கொள்ளாதே பாவம்."

தொழுவத்தைச் சுத்தம் செய்துவிட்டு அழுக்குக் கையுடன், மேடைமேலிருந்த குவளையை எடுத்துப் பானையிலிருந்து தண்ணீர் மொண்டு குடிக்கத் தொடங்கினாள் பானோ

"அட, கையை முதலில் கழுவிக் கொள்." பாக்வந்தி உறுமினாள்.

பானோ திணறிப்போனாள். அவள் கை கழுவவே மறந்து விட்டாள். பிறகு வசனி வீட்டுக் குழாய்க் கிணற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவந்து, நேரம்போவதே தெரியாமல் கை கழுவிக் கொண்டே இருந்தாள்.

நாராயணன் உண்டு முடித்தான். பிறகு ஹுக்காவில் புகை பிடித்தான். பாக்வந்தி வெயிலில் தலையை விரித்துப் போட்டுக் கொண்டு ஆற்றத் தொடங்கினாள். பாரோ கை கழுவிக்கொண்டே இருந்தாள்.

"போதும், போதும் கை கழுவியது" நாராயணன் கடிந்து கொண்டான்.

பாரோ திடுக்கிட்டாள். "இவ்வளவு நேரம் அவள் எதற்காகக் கைகழுவிக் கொண்டே இருக்க வேண்டும்?

இதற்கிடையில் பாக்வந்திக்கு ஓர் ஆண் குழந்தையும் பிறந்தது.

ஸந்தி தனது மகிழ்ச்சியைத் தெரிவித்துப் பாராட்ட வந்தாள். பாரோவும் பெருமகிழ்ச்சி அடைந்தாள். "இறைவன் கருணையை எல்லோருக்கும் அருளட்டும் அம்மா?" அவள் கூறினாள்.

"கடவுள் உனக்குக் கருணை காட்டியிருக்கக் கூடாதா? பக்தர்களைத்தான் பகவான் அதிகம் சோதிப்பாராம். பக்வந்தி மாதிரி உனக்கு ஒரு வழி பிறந்திக்கக் கூடாதா?"

"அதனால் என்ன, அவளும் என்னுடையவள் தான். எங்கள் வீட்டில் ஒளி பிறந்து விட்டது அம்மா. இறைவன் எல்லோருக்கும் இப்படி அருள்புரியட்டும். ஓர் ஆண் சந்ததி வேண்டுமென்று நான் எப்போதும் வேண்டியவாறே இருந்தேன்."

"உனக்கு ஒன்றுமே புரியவில்லையே பாரோ. இனி அவள்தான் வீட்டிற்கு அதிகாரி. நீ நாராயணனுடன் சேர்ந்து கொண்டவள் தானே. பாக்வந்தி இந்த வீட்டிற்கு வருமுன்னால், பஞ்சாயத்தார் முன்னால் நாராயணனிடம் கைநாட்டுப் பெற்றுக் கொண்டாள். அவள் புத்திசாலி, அவள்தான் வீட்டு எஜமானியும் கூட"

"அப்படியே இருக்கட்டுமே அம்மா! இனி நான் என்ன செய்யவேண்டும். நாளைக் கடத்த வேண்டியதுதானே."

"ஆனால் நினைத்துப்பார் பாரோ, நீ வந்த பிறகு இந்த வீட்டின் நிலையையே மாற்றிவிட்டாய். எவ்வளவு பொறுமையுடன் இதைச் சாதித்தாய்."

"பாக்வந்தி நல்ல இதயம் படைத்தவள் அம்மா. கொஞ்சம் நாக்கிலே காரம் இருக்கும். அவ்வளவுதான். இதோ பார்த்தாயா அம்மா மோதிரம்." அவள் தன் கையை ஸந்திக்கு முன்பு நீட்டியவாறு கூறினாள்- "குழந்தை பிறந்த மகிழ்ச்சியில் உன் மைத்துனர் கொடுத்த பரிசு இது. 'பாக்வந்தியுடையதைப்போல் ஒரு தாயத்தும் செய்துகொள், என்று சொன்னார். நான்தான் வேண்டாம் என்று சொல்லிவிட்டேன்."

"மோதிரம் வெகு அழகாக இருக்கிறது பானு." ஸந்தி அதைக் கையில் எடுத்துப் பார்த்தவாறு கூறினாள். "அரைத்தோலா எடை இருக்கும் என்று தோன்றுகிறதே!"

"இந்த மூன்று வருஷங்கள் என் சேமிப்புக் கணக்கிலும் ஆயிரத்து ஐநூறு ரூபாய்க்குமேல் சேர்ந்துவிட்டது. கொஞ்சம் கொஞ்சமாகக் கோதுமை வைத்திருக்கும் நிலத்தையும் மீட்டு விடுவோம். இல்லாவிட்டால் நாளைக்கு என் குழந்தைக்கு என்ன சொத்து இருக்கும். நாலுபேர் என்ன சொல்லுவார்கள்?"

"எவ்வளவோ துயரங்கள் இருக்கலாம். என்றாலும், குழந்தையை மடியில் எடுத்துக் கொண்டு விட்டேனானால் உள்ளம் குளிர்ந்து போகிறது."

வெகு நேரம் வரை ஸந்தி, பானுவின் முகத்தைப் பார்த்த வாறே அயர்ந்து போனாள்.

ஸந்தியின் அனுமானம் சரியாகவே இருந்தது. குழந்தை பிறந்த பிறகு, பாக்வந்தியின் போக்கே மாறிவிட்டது. நாராயணனையும், எதிர்த்துப் பேசத் துவங்கினாள். அவனாலும் ஒன்றும் பதில் சொல்ல முடியவில்லை. ஒரு தடவை குழந்தை காலாவைக் குளிப்பாட்டிக் கொண்டிருக்கும்போது, பானுவின் கையிலிருந்து, அது நழுவி விட்டது. சினம் கொண்ட பாக்வந்தி, அவள் முதுகில் ஓங்கிக் குத்தினாள்.

ஒருநாள் இரவு குழந்தை காலா வீறிட்டு அழத் தொடங்கினாள். மாடியில் படுத்திருந்த பானு கீழே இறங்கி ஓடி வந்தாள். கீழ் அறையின் உள்புறம் தாழிடப்பட்டிருந்தது. மனதைத் திடப் படுத்திக்கொண்டு, சங்கிலியை ஓசைப்படுத்தினாள் பானு. "பாக்வந்தி குழந்தை ஏன் அழுகிறது? என்னிடம் விடு அவளை."

"நான் எல்லாம் பார்த்துக் கொள்கிறேன்." உள்ளேயிருந்தவாறே விறைப்புடன் கூறினாள் அவள். கதவண்டையில் சிறிது நேரம் நின்று கொண்டிருந்தாள் பானு. பிறகு தன்னிடத்திற்குச் சென்று கட்டிலில் படுத்துக் கொண்டாள். பின்னால் வெகு நேரம்வரை அவளுக்குத் தூக்கம் வரவில்லை.

மறுநாளும் குழந்தை அழுதுகொண்டே இருந்தாள். பாக்வந்திக்குப் பக்கத்தில் உட்கார்ந்து, எலிப் பாஷாணத்தை ரொட்டி மாவுடன் கலந்து கொண்டிருந்தாள் வசனி. "குழந்தைக்கு கண் திருஷ்டிதான் பட்டிருக்க வேண்டும்?" அவள் கூறினாள்.

"பானுவின் பார்வையாகவே இருக்கும். நாள் முழுவதும் அவளை விழித்துப் விழித்துப் பார்த்துக்கொண்டே இருக்கிறாள்.

நான் வேறு இடத்திற்கு அவனை எடுத்துக் கொண்டு போனாலும், பின்னால் வந்து தொலைந்து விடுகிறாள். மலடியின் பார்வை பொல்லாது, என்றே சொல்லுவார்கள்."

"நீ அவனை பாபாவிடம் எடுத்துக் கொண்டுபோய் மந்திரித்து வா."

"உனக்கு எல்லாம் தெரியும் வசனி. நான் இந்த குழந்தையை எங்கே ஒளித்து வைத்துக் கொள்ள முடியும்?"

"குழந்தையை அவளிடம் கொடுக்கவே செய்யாதே. நீயே அவனைக் கவனித்துக்கொள்."

"நான் என்ன செய்வேன் வசனி. அவள் எப்போதும் குழந்தையைச்சீராட்ட என் பின்னாலேயே திரிகிறாள். ஒரு சமயத்தைப் போல் அல்லாமல், அவளுடைய கெட்ட பார்வை பட்டுவிட்டால் என்ன செய்வது என்றும் பயமாக இருக்கிறது."

"நீ சொல்லுவது வாஸ்தவம். கண்ணேறு கருங்கல்லைக்கூட உடைத்துவிடும். இதுவோ பூவைப் போன்ற குழந்தை."

சில நாட்களாகவே குழந்தையின் உடல்நிலை சீர்கெட்டிருந்தது. பாக்வந்தி பானோவின் மேல் சீறிவிழுந்த வண்ண மிருந்தாள். அவள் நாராயணனையும் விட்டுவைக்க வில்லை. அவனையும் வாட்டினாள். பானோவுக்கு முழு விவரமும் தெரியாது. என்றாலும் வீட்டிற்குள், கடும் புகைசல் தோன்றிவிட்டது.

ஓரிருமுறை பாக்வந்தி நாராயணனுடன் தகராறு செய்து கொண்டு அலறத் தொடங்கினாள். தலையிலும், முகத்திலும் அடித்துக்கொண்டு அழத்தொடங்கினாள். தன்னையே நொந்து கொண்டு நாராயணன் வீட்டை விட்டு வெளியேறினான். வீட்டிலே அன்று அடுப்பே மூட்டவில்லை. எல்லோருமே பட்டினி.

ஒரே ஒருமுறை பானோ, பாக்வந்தியைக் கேட்டாள், "ரொட்டி சுடட்டுமா?"

"எப்போதும் இவளுக்கு வயிறுதான் நினைவு" பாக்வந்தி சினம் கொண்டு கூவினாள். ஒன்றுமே பேசாமல் பானோ தன் இருப்பிடத்திற்குச் சென்றுவிட்டாள்.

பொழுது சாய்ந்ததும் நாராயணன் பானோவிடம் வந்தான். அவனைக் கண்டதும் பானோ மகிழ்ச்சி அடைந்தாள். பிறகு அவள் மனம் மீண்டும் வாடத் தொடங்கிற்று.

அவள் அருகில் கட்டிலில் வந்து உட்கார்ந்து கொண்டான். சில நொடிகள் மௌனமாகக் கழிந்தன. நாராயணன் தன் கையை விரித்து, ரேகையைப் பார்த்துக்கொண்டு பேசத் துவங்கினான். "பானோ!"

ஏனோ அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவனுடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

"பானோ, நான் தினமும் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன். பாக்வந்தி சில நாளைக்கு உனக்கு உணவுகூடத் தருவது இல்லை. நீ எங்கேயாவது வெளியே சென்று, ஒரு குவளை தண்ணீரைக் குடித்து விட்டு வந்து படுத்துவிடுகிறாய்."

நாராயணனின் கூற்றைக் கவனிக்காமலே கேட்டாள் பானோ: "காலாவுக்கு உடம்பு குணமாகி விட்டதா?"

"காலா பாலா என்று நீயேன் கவலைப்படுகிறாய்? அவள் உன்னை வளர்ப்பு நாயைவிடக் கேவலமாக நடத்துகிறாள்."

இப்போது உண்மையிலேயே பானோ புகார் செய்தாள் : "பாக்வந்தி என்னைக் குழந்தையைத் தொடக்கூட அனுமதிப்பது இல்லை. ஏனோ, என் நெஞ்சு காலாவுக்காக ஏங்குகிறது."

"அவள் தன் பிறந்த வீட்டுக்குப் போய்விடுவேன் என்று வேறு பயமுறுத்துகிறாள். திரும்பியும் வரமாட்டாளாம். அந்தப் பீடை பிடித்த மனிதர்களை எல்லாம் எனக்குத் தெரியும். ஏதாவது பெருந்தொகையை வாங்கிக்கொண்டு, வேறு எவனுக்காவாது இவளை விற்றுவிடுவார்கள்."

"ஏன் அப்படி?" பானோ வியப்புடன் கேட்டாள்.

"உன்னை அவள் அடிக்கக்கூடச் செய்தாளாமே. எனக்கு ஸந்தியின் மூலம் விவரம் தெரிந்தது."

"அது அவளுடைய இஷ்டம்."

"நான் உயிருடன் இருக்கும்போதே, உனக்கு இந்த நிலை ஏற்படுவதை என்னால் பொறுத்துக் கொள்ளவே முடியவில்லை."

பானோ, பெருமூச்சு விட்டாள். "இந்த உலகத்திலிருந்து நான் போய் விட்டால் நல்லது.".

"அவள் உண்மையிலேயே குழந்தையை எடுத்துக்கொண்டு போய்விடுவாள் என்று தோன்றுகிறது. 'இந்த வீட்டில் ஒன்று நான் இருக்க வேண்டும், அல்லது பானோ' என்று அவள் சொல்லுகிறாள்."

நாராயணன் சொல்வது எதையும் அவள் புரிந்து கொண்டதாகவே தெரியவில்லை. வெளிர்ந்த முகத்துடன் அவள் நாராயணனை ஏறிட்டுப் பார்த்தாள்.

"குழந்தை இல்லாமல் இருந்தால், நானே அவளை வீட்டை விட்டு விரட்டிவிடுவேன். எங்கேயாவது போய் முட்டிக்கொள் என்று சொல்லுவேன். ஆனால் இப்போது நிலைமையே வேறு பானோ.",

அவளால் பதில் ஏதும் சொல்ல முடியவில்லை.

"சௌதாவாலா ஃபாதாவை உனக்கு நினைவிருக்கிறதா. இந்த தடவை எருமை வாங்கினோமே, அவனேதான். மிகவும் நல்ல மனிதன். ஒரே ஒரு மகன் இருந்தான். அவனுடைய காலமும் ஆகிவிட்டது. தனியாளாகிவிட்டான். நிறைய நிலபுலன்கள் உண்டு. நான் அவனிடம் பேசினேன். அவனும் ஓரிரு முறை உன்னைப் பார்த்ததுண்டு. நம் வீட்டிற்கும் வந்திருக்கிறான் அல்லவா. 'பானோவுக்குச் சம்மதமானால் சரிதான்' என்று அவன் சொல்லுகிறான்."

உடனடியாக பானோவின் நாவு உள்ளுக்கிழுத்துக் கொண்டது.

"பானோ, என்னைப்புரிந்து கொள்ளுவாய் என்று நம்புகிறேன். இதில் என்னுடைய சுயலாபம் ஏதுமில்லை. பாக்வந்தி என்னையே தூசுமாதிரி நடத்துகிறாள். உனக்கு எத்தகைய கௌரவம் கொடுப்பாள் என்று தெரியாதா? உன்னுடைய நன்மைக்காகத் தான் சொல்லுகிறேன்."

பானோ நிலைகுத்திப்போய் மலங்க, மலங்க விழித்தவாறு நாராயணனை நோக்கினாள். சரி என்றோ, முடியாது என்றோ அவள் பதிலிறுக்கவில்லை.

"நாளை அவன் வருவான், நான் பானோவைக் கேட்டுப் பதில் சொல்லுகிறேன் என்று சொல்லியிருக்கிறேன்."

பானோவின் நினைவு, உணர்வு எல்லாம் மரத்துப் போயின!

"தைரியத்தைக் கைவிடாதே பானோ. குழந்தைமட்டும் பெருமலிருந்தால், அவளைப் பொருட்படுத்தவே மாட்டேன். சௌதே கிராமத்தில் உனக்கு ஒரு குறைவுமிராது. சந்தோஷமாகவே இருப்பாய். மனித யத்தனத்தில் ஒன்றுமே இல்லை பானோ. எங்கே உப்பும் நீரும் எழுதியிருக்கிறதோ அதுதான் லபிக்கும்." திகைத்துப்போய் உட்கார்ந்திருந்த பானோவின் தோளில் அன்புடன் தட்டிவிட்டு, படிவழியாகக் கீழே இறங்கிப் போனான் நாராயணன்.

பகல் பொழுதும் நீங்கி இரவு வந்தது. இரவு கழிந்து பொழுதும் புலர்ந்தது. 'தான் உறங்குகிறோமா? விழித்திருக்கிறோமா!' என்ற உணர்வுகூடப் பானோவுக்கு இல்லை. அப்படி ஒரு மயக்க நிலை.

சாணி உருட்டுவதற்குக்கூட அவள் கீழே இறங்கிப் போகவில்லை. பாக்வந்தியும் அவளைக் கூப்பிடவில்லை. வீடு முழுவதும் ஆடுவதைப் போல் அவளுக்குத் தோன்றிற்று. ஒரு வேளை பூகம்பமோ? இல்லை. அவளுக்குத்தான் தலை சுற்றியது.

அவள் கண் முன்பு பூனை அலமாரிக்குத் தாவிற்று. ஒரு குருவியின் கழுத்தைக் கடித்து வாயில் கவ்விக்கொண்டு வெளியேறிற்று. அதை விரட்டக்கூட அவளுக்குத் துணிவு இல்லை.

"பானோ தேனீர் குடிக்க வா" பாக்வந்தி குரல் கொடுத்தாள்.

மெல்லப் படியிறங்கிக் கீழே வந்தாள் பானோ.

வெண்ணெய் தடவிய பரோட்டா, பாதிக்குப் பாதி பால் கலந்த தேனீர், இரண்டையும் அவள் முன்பு வைத்தாள் பாக்வந்தி.

ஒருவாய் தேனீரை அருந்தினாள் பானோ. ரொட்டித்துண்டு தொண்டைக்குக் கீழே இறங்க மறுத்தது. அரைக்குவளைத் தேனீரைக் குடித்த பிறகு அவள் மீதியை நாய்க்கு வார்த்தாள்.

சிறிது நேரம் வரை மௌனமாக வீட்டுவேலை செய்து கொண்டிருந்த பாக்வந்தியையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

"பாக்வந்தி, இதோ பார் இந்த மோதிரம் நழுவிவிடும்போல் இருக்கிறது." அதை அவளிடம் கழற்றிக் கொடுத்தாள் பானோ.

"நீயே போட்டுக்கொண்டிரேன். உன்னுடைய சொத்தாக என்னிடமே இருக்கட்டும்." அதை வாங்கி ஒரு துணியில் முடிந்து பெட்டியின் மூலையில் வைத்தாள். "உனக்கு எப்போது தேவையோ, வந்து பெற்றுக்கொள்" பாக்வந்தி கூறினாள்.

அன்று பிற்பகல் ஃபாதா வந்தான்.

"நான் கேணியின் பக்கம் நிற்கிறேன். நீ அங்கு வந்து சேர்ந்து கொள்."- குடிகாரநாராயணன் அவனிடம் சொல்லிவிட்டு ஃபாதாவை அழைத்துக் கொண்டு வெளியேறினான்.

யாரோ மண்டையில் ஓங்கி அடித்தாற்போல் இருந்தது அவளுக்கு. பிரமை பிடித்தாற்போல் ஒரே நிலையில் உட்கார்ந் திருந்தாள் ஓரிருமுறை கைவேலையை விட்டு அவளை ஏறிட்டுப் பார்த்தாள் பாக்வந்தி "கைக்குக் கொஞ்சம் ரொட்டி செய்து தரட்டுமா?" அவள் கேட்டாள். "வேண்டாம்." பானோ வெளியே சென்றாள். பிறகு திரும்பவும், உள்ளே வந்தாள். ஒரு வேலையும் இன்றி ஓரிரு முறை அவள் வெளியில் சென்றாள். பிறகு வீட்டிற்குள் வந்தாள்.

"ஏதாவது வேணுமா?"

"ஒன்றும் தேவையில்லை."

"அவர்கள் பாவம் உனக்காக காத்திருப்பார்கள், போயேன்".

பானோ வீட்டினுள் சென்றாள்.

கயிற்றிலிருந்து கொசுவம் வைத்த பாவாடையை எடுத்தாள். பிறகு என்ன நினைத்தாளோ, அதை அங்கேயே திரும்பவும் போட்டாள்.

வெளியில் முற்றத்தில் குழந்தை காலா விரலைச் சூப்பிக் கொண்டு இருந்தான். பானு அவனருகில் சென்று தலையை மெல்ல வருடினாள். 'நான் போகிறேன் மகனே' குழந்தை விரலை எடுத்துவிட்டுச் சிரித்தது.

வாசல்வரை சென்ற பிறகு, அங்கிருந்தே மீண்டும் அந்த வீட்டை நாலு புறமும் நோக்கினாள். ஸந்தியின் வீட்டு வாசலில் ஒரு கணம் தயங்கி நின்றாள். பிறகு தொடர்ந்து நடந்தாள்.

வெளிப்பாவாடை அணியாமல் குறையாடையுடன் தலையில் முட்டாக்கும் இன்றி பானு வெளியூருக்குப் பயணமானாள்.

* * *

Printed At : Saraswati Printers A-16, Sector 8, Noida (U.P.)